நீங்கள் மற்றவர்களால் எப்படி நடத்தப்படுகிறீர்கள்? தொடர்ந்து நீங்கள் பயன்படுத்தப்படுகிறீர்களா; அல்லது ஒதுக்கப்படுகிறீர்களா? உங்களை ஒரு மனிதனாகவே மதிக்கவில்லையா? உங்களோடு கலந்து ஆலோசிக்காமல் திட்டங்கள் வகுக்கிறார்களா?

தாங்கள் வஞ்சிக்கப்பட்டவர்களாகவும் நசுக்கப்பட்டவர்களாகவும் நினைப்பவர்களிடையே அதிகம் காணப்படும் விஷயங்கள் மேலே சொல்லப்பட்டவை. நீங்கள் அடுத்தவர்களை, உங்களை எப்படி நடத்த வேண்டுமென போதித்துள்ளீர்கள். அது போலத்தான் நீங்கள் நடத்தப்படுவீர்கள்.



# நிமிர்ந்து நில்லுங்கள்!



உதாரணமாய் ஒரு பெண் அதிகாரமிக்க கணவனால் இரக்கமில்லாமல் கட்டுப்படுத்தப்படுவதாக புகார் சொல்கிறாள். தன் மூன்று குழந்தைகளும் தன்னை மதிப்பதில்லை என்று நம்பிக்கையற்று விடுகிறாள் அவள். அந்தப் பெண்ணின் முற்பகுதியை ஆராய்ந்து பார்த்ததில், குழந்தைப் பருவத்திலிருந்து அவள் நம்பிக்கையற்ற தன்மைக்கு பலியிடப்பட்டிருக்கிறாள். அவளுடைய மிகவும் கட்டுப்படுத்த நினைக்கும் தந்தை, அவளின் திருமணம் நடக்கும் வரை அவளின் மேல் ஆட்சி செலுத்தி இருக்கிறார். துரதிர்ஷ்டவசமாய் கணவனும் அவளின் தந்தை போல் அமைந்து விடவே அவளின் நிலை தர்மசங்கடத்திற்குள்ளானது.

உண்மையில் அவள் மற்றவர்கள் தன்னை அப்படி நடத்துமாறு அமைத்துக் கொண்டு விட்டாள் என்றுதான் சொல்ல வேண்டும். அவளுக்கு அவளின் பிரச்னைகளுக்குப் பல வழிகள் கூறப்பட்டன.

அந்தப் பெண்ணின் புதிய நடத்தையின் அமைப்பு கணவனிடத்தும் குழந்தைகளிடத்திலும் செலுத்தப்பட்டன. வேற்று ஆடவரோ, அல்லது குழந்தைகளோ இருக்கும் பட்சத்தில் அவளிடத்தில் கோபம் கொள்வதும் அவளை வெறுப்பூட்டுவதும் அவளது கணவனின் முக்கியமானதொரு தந்திரச் செயல். இந்தச் சம்பவங்களினால் அவள் ஒடுங்கிப் போனாள். அத்தோடு இவ்விஷயத்தில் கலாட்டாவை உண்டாக்க அவள் விரும்பவில்லை. அவளுக்கு முதலில் கொடுக்கப்பட்ட வேலை இதுதான். இம்மாதிரி சமயங்களில் கணவனிடம் எதிர்த்து சற்று மந்தமாய் பேசி விட்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்து விடுவது; குழந்தைகள் மரியாதைக் குறைவாய் நடந்து கொள்ளும் போது அவர்களிடம் உறுதியான வேண்டுகோள் மூலம் மரியாதை கேட்பது.

இம்மாதிரியான பயிற்சியின் விளைவாய் சில மாதங்களுக்குப் பின் கணவன், குழந்தைகளால் அவள் வித்தியாசமாய் நடத்தப்

படுவது தெரிய வந்தது. மற்றவர்களை நம்மை எப்படி நடத்த வேண்டுமென நாம் எவ்வாறு கற்பித்துச் சொல்கிறோமோ அது மாதிரியே நாம் நடத்தப்படுகிறோம் என்பதை அவள் புரிந்து கொண்டாள். மூன்று வருடங்களுக்குப் பின் அவளுக்கு அவமரியாதையோ அவமானமோ அறவே இல்லை என்று அறியப்பட்டது.

அத்தோடு அந்தப் பெண் தன்னுடைய சொந்தக் கட்டுகளிலிருந்து **(strings)** விடுபடவும் கற்றுக் கொண்டாள். வார்த்தைகளில் இல்லாமல் நடத்தையில் மக்களுக்குக் கற்றுத் தர வேண்டும். எல்லோரிடையேயும் எல்லாவிதமான செய்திப் பரிமாற்றங்கள் இருக்ககத்தான் செய்கின்றன. ஆனால் சக்தி வாய்ந்த வழிகளில் நடத்தையைக் கற்றுக் கொள்ளாமல் விட்டு விட்டால் நீங்கள் வெளியே தள்ளப்படுகிறீர்கள். மனோ திடத்தை மெய்ப்பிக்கும் செய்கை, நன்கு உத்தேசித்து சொல்லக்கூடிய பத்து லட்சம் வார்த்தைகளை விட மேலானது.

தன் கருத்தைப் பிறர் மீது திணிப்பவர்களாயிருப்பதை அவர் விரும்பத்தகாததுமாயும் வேண்டுமென்றே செல்கிற தாக்குதலாயும் கருதுகிறார்கள்.. உண்மையில் அப்படியல்ல. உங்களுடைய உரிமைகளையோ அல்லது நீங்கள் குற்றவாளிகளாயில்லாததை உணர்த்தும் வகையிலோ துணிவுள்ள, நிச்சயமான பிரகடனங்களை உருவாக்குவதை அது அர்த்தப்படுத்துகிறது.

இன்னொரு உதாரணத்தைப் பார்ப்போம். அவர் விற்பனையாளர்களிடம் பயந்த சுபாவத்தோடு பேரத்தில் ஈடுபடுவார். விரும்பாத பொருட்களையே அவர் எப்போதும் வாங்குவார். காரணம் விற்பனையாளரின் உணர்வுகளை பாதிப்பதற்கு நாம் காரணமாகி விடக் கூடாது என்று எண்ணுவார். இப்படிப்பட்டவர் வற்புறுத்துபவராய் மாறும் எண்ணத்தோடு செயல்பட ஆரம்பிக்கிறார். ஒருமுறை தனக்கு ஷூ வாங்குவதற்காக செல்கிறார். அவர் விரும்பும் ஜோடியே அவருக்குக் காண்பிக்கப்படுகிறது. அவரும் அதை ஒப்புக் கொள்கிறார். ஆனால் விற்பனையாளர் அதை ஒரு பெட்டியில் வைத்துக் கட்டும் போது அவைகளிடையே ஒரு கீறலைக் காண்கிறார். உடனே அவர் தனக்குள் எழும் பழைய குணத்தை தலையெடுக்க விடாமல் நசுக்கிறார். 'இதிலொன்றில் கீறல் விழுந்திருக்கிறது. தயவு செய்து வேறு ஜோடி தாருங்கள்' என விற்பனையாளரிடம் கூறிவிடுகிறார். அவரும் சம்மதித்து விடுகிறார். இது அவருக்கொரு திருப்புமுனை. அவரின் வற்புறுத்துகிற குணம் அவருக்குத் கீறலில்லாத ஷூக்களை பெற்றுத் தருகிறது. அவரின் முதலாளி, மனைவி, குழந்தை மற்றும் நண்பர்கள் அந்தப் 'புது மனிதரை'ப் பற்றிப் பேசத் துவங்குகின்றனர். அவர் விரும்புவதை பெறுவதோடு மட்டுமில்லாமல், கணக்கிட முடியாத மரியாதையையும் அவர் பெறுகிறார்.

இதோ மற்றவர்கள் உங்களை எப்படி நடத்த வேண்டும் என்பதை அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் சில வழிகள்:

வார்த்தைகளுக்குப் பதிலாக நடத்தையின் மூலம் உங்களை முடிந்தவரை பிரதிபலியுங்கள். உங்களுடைய வீட்டில் யாராவது பொறுப்புக்களை ஏற்க மறுத்தால் — எப்பொழுதும் உங்களுடைய பாதிப்பு முறையீடு செய்து விட்டு நீங்களே அதைச் செய்து விடுகிறீர்கள். அடுத்த முறை நடவடிக்கையில் இறங்குங்கள். உங்கள் மகன் குப்பையைக் கொட்ட வேண்டியிருக்கும். தொடர்ந்து மறந்து விடுகிறான். ஒரு தடவை அவனுக்கு ஞாபகப்படுத்துங்கள்.



தமிழ்நாட்டில் கிடைக்கிறது

ஜே எல் மாரிஸன் (இந்தியா) லிட்.

# அழகிய பெண்ணே...
# ஒப்பிலா உந்தன் ஒப்பனையே!

அழகிய பெண்ணே! நீல மேகத்தை கடந்து நிவியா வந்தது உன்னிடமே,
பொன்மேனி கதையை கூறவோ அழகாக...
நிவியா டால்க், எத்தனை மிருது, எத்தனை மென்மை. மணமோ அருமை...அருமை.
குளித்தபின் அன்றாடம் தூவிவிடுவாயே, தாராளமாய். மாறாத புன்னகையை
தவழவிடுவாயோ நாகரீக நங்கையே.

எத்தனை நேரமானாலும் உன் குளிர்ச்சியான மேனியிலிருந்து
நறுமணம் வீசுகிறதே...மாறாமல்.




**NIVEA®**
**டால்க்**
எத்தனை மிருது!
எத்தனை மென்மை!

உங்கள் குழந்தைக்கு ஊட்டுங்கள் முட்டையின் புரதச் சத்தூட்டத்தை!



# ஃபாரெக்ஸ்®-எக்




## 6 மாதம் முதல்

புதிய ஃபாரெக்ஸ் எக் — இது, உங்கள் குழந்தையின் முழு நிறைவான வளர்ச்சிக்குத் தேவையான புரதச் சத்தைக் கொண்டுள்ளது. இது, நன்றாக முன்பே பக்குவப் படுத்தப்பட்டது. ஆகவே இது, குழந்தையின் மென்மை யான வயிற்றின் ஜீரண சக்திக்கு ஏற்றதாகும்.

**ஃபாரெக்ஸ்—சுவையுடன் வளரும் வழி**

**இதோ ஃபாரெக்ஸ் வளர்ச்சி வழி: 1. பால் சேர்த்த ஃபாரெக்ஸ் சீரியல் 2. ஃபாரெக்ஸ்-வெஜ் 3. ஃபாரெக்ஸ்-எக்**

GX/32/203 TML

உங்களை அவன் அசட்டை செய்தால் கடைசி கெடுவை கொடுங்கள். அதையும் அவன் அசட்டை செய்தால் அமைதியாய் குப்பையை அவனது படுக்கையில் கொட்டி விடுங்கள். ஒரு தடவை படுக்கையில் கொட்டப்படும் பிரயோகம் அவனுக்கு உங்களின் உரிமையை எடுத்துக் கூற உதவும்.

உங்களுக்கு விருப்பமில்லாததையும் அவசியமில்லாமல் பொறுப்பைக் கொடுக்கும் விஷயங்களையும் செய்வதற்கு மறுத்து விடுங்கள். இரண்டு வாரங்களுக்குத் துணிகளை லாண்டிரிக்குப் போடுவதை நிறுத்தி விட்டு நடப்பதை கவனியுங்கள். உங்களால் முடிந்தால் இன்னொருவரை கூலி கொடுத்



துச் செய்யச் சொல்லுங்கள், அல்லது குடும்பத்திலுள்ள மற்றவர்களே தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ள கற்றுத் தாருங்கள். பொதுவாய் அடிமை போன்ற வேலைகளை நீங்கள்தான் செய்கிறீர்கள். காரணம் குற்றம் சொல்லாமல் அந்த வேலைகளை நீங்கள் செய்வதாய் மற்றவர்களுக்குக் கற்பித்திருக்கிறீர்கள்.

அற்பமாய் எண்ணும் இடங்களில் கூட பிடிவாதமான வாக்கியங்களை உபயோகியுங்கள். பணியாள், விற்பனையாளர், மேஜை கிளார்க்குகள், டாக்ஸி டிரைவர்கள், அறிமுகமில்லாதவர்களிடமும் தன் கருத்தைத் திணிப்பவராய்ப் பேசுங்கள். அதிகார தோரணையுள்ளவர்களிடமும் திருப்பிப் பேசும் போது இதைக் கையாளுங்கள்.

உங்களை பலியிட நினைக்கும் வார்த்தைகளை உபயோகிப்பதை நிறுத்துங்கள். 'நான் முக்கியமானவன் அல்ல'. 'நான் உண்மையில அவ்வளவு புத்திசாலியல்ல!' என்னால் சட்ட சம்பந்த விஷயங்களை ஒரு நாளும் புரிந்து கொள்ள முடியாது' — இது போன்ற சொந்தக் கருத்துக்கள் உங்களிடம் மற்றவர்கள் ஆதிக்கம் செலுத்தப் பயன்படும் அனுமதிச் சீட்டுகள்.

போலி புலம்பல் புலம்புவர்கள், இடைமறிப்பவர்கள், வாதாடுபவர்கள், தற்பெருமை பேசுபவர்கள், தன் பேச்சால் பிறரைச் சலிப்படைய செய்பவர்கள் — இவர்களைச் சந்திக்கும் போது 'நீங்கள் என்னை இடைமறிக்கிறீர்கள் அல்லது என்றுமே மாறாத விஷயங்களைப் பற்றி குற்றம் சொல்கிறீர்கள் என்று கூறி அவர்களின் நடத்தையைப் பிரித்தெடுங்கள். இப்படிப் பட்ட வியூகம்தான் நட்பை இழக்கச் செய்யும் நடத்தை இது என்பதை அவர்களுக்கு நல்ல விதத்தில் எடுத்துக் காட்டும் காரணிகளாகும். அமைதியுடனும் வெளிப்படையாகவும் இருக்கும் உங்களுடைய கவனிக்கும் தன்மையினால் நீங்கள் 'குற்றவாளி' வீட்டில் உட்காருவதை குறைந்த அளவு நேரமே அனுமதிக்கிறீர்கள்.

நீங்கள் விரும்பும் பொருள்களில் உங்கள் நேரத்தைச் செலவிட உங்களுக்கு உரிமையிருக்கிறது என்பதை மற்றவர்களுக்குப் போதியுங்கள. சமையலிலோ, அல்லது அலுவலக வேலைகளிலிருந்தோ ஓர் இடைவேளை எடுத்துக் கொள்வதில் அடம்பிடியுங்கள். உங்களுடைய ஓய்வை கணக்கிடுவதோடு இல்லாமல் அதற்கு முக்கியத்துவம் கொடுத்து, அடுத்தவர் அந்த நேரங்களை ஆக்கிரமிப்பு செய்ய விடாமல் தடுப்பதில் பற்றுள்ளவராய் இருங்கள்.

'முடியாது' என்று சொல்லத் தயங்காதீர்கள். உலகிலேயே மிகச் சிறந்த கற்பிக்கும் வார்த்தைகளுள் இதுவும் ஒன்று. உங்களைத் தவறாக புரிந்து கொள்ள இடங்கொடுக்கும் தயக்கத்தையும் தீர்மானமில்லாதிருத்தலையும் மறந்து விடுங்கள். 'இந்தப் பக்கமா' அந்தப் பக்கமா' என்று சந்தேகப்பட வைக்கும் பதிலை விட, 'முடியாது' என்றொரு சொல் உங்களுக்கு மற்றவர்களிடம் மரியாதையைப் பெற்றுத் தரும். கூடவே உங்களுக்கே உங்களைப் பெருமைப்பட வைக்கும்.

மறந்து விடாதீர்கள். நீங்கள் எப்படி நடத்தப்பட வேண்டும் என்பதை நீங்களேதான் மற்றவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறீர்கள். இதை உங்களுடைய வாழ்க்கையில் ஒரு வழிகாட்டும் விதியாக பெற்றுக் கொண்டால் உங்களுடைய 'சொந்தக் கட்டுக்களிலிருந்து' விடுபடும் வழியை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறீர்கள் என்று உறுதியாய் நம்பலாம்.

— ஜி. முருகவேல்.

ஆதாரம்: ரீடர்ஸ் டைஜஸ்ட்.


அட்டை வண்ணப்படம்:
ஏ. வி. பாஸ்கர்.
அட்டையில்: ஷோபா.

# பரிட்சை நெருங்கிடும் காலம்?
# கவனமாக படித்திடும் நேரம்



முழுதும் தயாராயிருந்திட வேண்டிய காலம்
**காம்ப்ளான்®**
பருக வேண்டிய நேரம்.

## காம்ப்ளான் ஒன்றில்தான் அவனுக்கு தேவையான அதி ஊட்டமளிக்கும் 23 மூலாதார சத்துணவுகள் உள்ளன.

குழந்தைகள், முக்கியமாக பரிட்சைக்கு படிக்கும் காலத்தில், திடமாக இருந்திடுவது அவசியம். அதனால்தான் பரிட்சை நடக்கும் நேரம் காம்ப்ளான் நேரம் என்று அன்னையர் அறிவர்.

உடல் வளர்ச்சியில் பங்கு பெறுவதே புரதம் என்ற சத்துதான். காம்ப்ளானில் குழந்தைகளுக்குத் தேவையான புரதம் (20%) இருப்பது மட்டுமல்ல, அப்புரதம் மிகச்சிறந்த புரதமுமாகும் (பால் புரதம்). அத்துடன், அது குழந்தைகளுக்கு தேவையான அதி ஊட்டமளிக்கும் கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச்சத்து, வைட்டமின்கள், தாதுக்கள் ஆகிய 22 கூடுதல் மூலாதார சத்துணவுகள் கொண்டதாகும்.

துவங்குங்கள் காம்ப்ளான் உங்கள் குழந்தைகளுக்கு—அன்றுடம் இருவேளை.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளாம் சாக்கலேட், ஏலக்காய்—குங்குமப்பூ, ஐஸ்க்ரீம், ஸ்ட்ராபெர்ரியும், சாதா ரகத்திலும்.

குழந்தைகள் மிகவும் விரும்பிடும் சுவைகள்.




## காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/22/203 TML

# எங்களுடையது

# அபாயமான வேலை

"நான் அந்தக் காலத்திலேயே பொறந்து அந்தக் காலத்திலேயே செத்துப் போயிட்டு இருக்கக் கூடாதா'ன்னு நினைப் பேன் என்று வெடிச் சிரிப்புடன் சொன் னார் ஒரே கேமிராவுமனான விஜயலட்சுமி.

இவர் கேமிராப் பெண்ணாக வந்ததே தற்செயலாகத்தான். பிரபல படத் தயாரிப் பாளர் மறைந்த பி. ஆர். பந்துலுவின் பெண்ணான விஜி திரைப்படத்துறையைப் பற்றி நினைத்தது கூடக் கிடையாதாம். எஸ்.ஐ.ஈ.டி.யில் மனையியல் படித்தவர். வீட்டின் எதிர்ப்பையும் மீறி காதல் திரு மணம் செய்து கொண்டாராம். ஆனால் அது ஒரே வருடத்தில் தோல்வியில் முடிந் தது. அம்மா வீட்டில் வருத்தத்துடன் இருந்த வருக்குப் பலரும் சொன்ன அறிவுரை 'சும்மா இருக்காதே. ஏதேனும் செய்யேன்' என்பதுதான்.

ஒரு நண்பர் 'ஏன் நீ ஃபிலிம் இன்ஸ்டிடி யூட்டில் கேமிரா பயிற்சி பெறக் கூடாது' என்று கேட்டாராம். அதை அடிப்படையாக வைத்துத்தான் சேர்ந்தாராம்.

"நான் இப்படி கேமிராவுமன் ஆவே னென்று நினைக்கவேயில்லை. நான் அது வரைக்கும் ஒரு ஃபோட்டோ கூட எடுத்த தில்லை. 'அ'விலிருந்து இன்ஸ்டிடியூட்டில் தான் கற்றுக் கொண்டேன். அதற்கப்புறம் நாலரை வருடங்கள் அசோக்குமார், மாருதிராவ் போன்றவர்களிடம் எல்லாம் அஸிஸ்டெண்ட் காமிராவுமனாகப் பணி யாற்றினேன். அப்புறம் 'சின்ன வீடு' படத் தில் இருந்து தனியாகச் செய்ய ஆரம்பித் தேன்...."

என்கிறார்.

கேமிராமேனாக இருப்பது கஷ்டமில் லையா? கேமிராவைத் தூக்கிக் கொண்டு படம் எடுக்க வேண்டும். கோணங்களைப் பார்க்க மேலே, கீழே என்று எங்கு வேண்டு மானாலும் ஏற வேண்டியிருக்கும். நீண்ட நேரம் உழைக்க வேண்டி இருக்கும். இதெல் லாம் ஒரு பெண்ணுக்குச் சாத்தியமா?

வழக்கம் போல 'பளீர்' சிரிப்புடன் சொன்னார். "ஏன் பளு தூக்கும் வேலை யெல்லாம் பெண்கள் செய்வதில்லையா என்ன? ஒரு தண்ணீர்க் குடம் சுமைதான் இருக்கும் கேமிராவின் கனம். அது தவிர எனக்கு ஒல்லியான உடம்பு. அதனால சரசரன்னு மேலே ஏறவோ, இல்ல ஒரு சின்ன பொந்துலேந்து 'ஆங்கிள்' வைக் கவோ என்னால எளிதா முடியும்.



ஆனா, நிச்சயமா பெண்கள் கேமிரா வுமனா வரணும்னா அதுக்கு ரொம்ப உடல் பலம், 'ஸ்டெமினா' வேணும். தைரியம், தன்னம்பிக்கை, விடா முயற்சி எல்லாம் நிச் சயமா வேணும்..."

"... அதே போல இது நேரம் காலம் பாக்க முடியாத தொழில் இல்லையா...."

"....நிச்சயமா, சில சமயம் இன்னிக்குக்

காலையில 'ஷூட்டிங்' ஆரம்பிச்சு நாளைக்குச் சாயங்காலம் வரை கூட எடுத்துக்கிட்டு இருப்பாங்க. அதனால பெண்கள் இந்தத் துறைக்கு வர்றதா இருந்தா ரொம்பப் புரிந்து கொண்ட கணவரோ அல்லது குடும்பமோ இருந்தாதான் பிரகாசிக்க முடியும்....''

''....அப்படின்னா திருமணமான பெண் கேமிராவுமனா வேல செய்யறது கஷ்டம்னு சொல்றீங்களா?''

''.... கொஞ்சம் கஷ்டம்தான்....''

''கேமிராமேன்களுக்கு உரிய இடம் திரைப்படத் துறையில கிடைச்சிருக்குன்னு நினைக்கிறீங்களா....?''

''...அவர்களுக்குரிய மரியாதை கிடைச்சிருக்கு. இப்போ கேமிராவைப பத்தியெல்லாம் ஜனங்கள் கூட பேச ஆரம்பிச்சுட்டாங்க. பாலுமகேந்திரா; மகேந்திரன் போன்றவர்களை எல்லாம் அடையாளம் காண ஆரம்பிச்சிருக்காங்க. அதனால அவர்களுடைய உற்சாகம் இன்னும் அதிகமாகி இன்னும் நல்லா செய்யணும்னு ஒரு ஆர்வம் பிறக்கும்....''

''அப்போ கேமிரா சிறப்பா இருக்குன்னா, அங்கே டைரக்டருடைய நிலை என்ன...?''

''இல்லை, டைரக்டர்தான் கடவுள் மாதிரி. அவருடைய தூதன் கேமிராமேன்னு சொல்லலாம். டைரக்டர் என்ன நினைக்கிறாரோ அதைச் சிறப்பா பிரதிபலிக்க வேண்டியதுதான் ஒரு கேமிராமேனுடைய கடமை....''

''சரி, கேமிரா மேலோங்கி இருந்தா.....''

''.... எனக்கு அது சரின்னு படலை. 'பூட்டாத பூட்டுக்கள்'ள கேமிரா ரொம்பப் பிரமாதமா இருக்கு அப்படின்னு விமரிசனம் வந்தது. அதாவது மற்ற அம்சங்கள்ளாம் அதுல எடுபடாம போயிடிச்சுன்னு தான் அர்த்தம். ஒரு சீன்ல, நடிப்பு, காட்சி, கேமிரா, டைரக்ஷன் எல்லாம் சரிவிகிதமா சிறப்பா இருந்ததுன்னா ஒன்றை மாத்திரம் பிரிச்சுப் பார்க்கவே தோணாது. அதுதான் சரியும் கூட......''

பேண்ட், ஷர்ட்டுடன் உற்சாகப் பேசிக் கொண்டிருந்த அவரைப் பார்க்கும் போது எனக்குச் சந்தேகம் வந்தது. பெண்களை ஆபாசமான கோணங்களில் எல்லாம் படம் எடுக்க வேண்டி இருக்குமே! ஒரு பெண்ணான இவருக்கு அந்த மாதிரி நேரங்களில் கோபம் வந்தது இல்லையா....?

கையைத் தட்டிக் கொண்டு சிரித்தார் விஜி.

நல்ல கேள்வி கேட்டிங்க போங்க. அந்தப் பெண் அப்படியெல்லாம் நடிக்க ஒத்துக்கறாங்க. பாக்கறவங்க பார்க்கறாங்க. காசு போட்டு எடுக்கறவங்க எடுக்கறாங்க. நானென்ன செய்ய முடியும்?

''இந்த மாதிரி பேசறது எப்படி சரியாகும்? ஒரு பெண்ணா உங்களுக்கு அந்த நேரங்கள்ள வருத்தமாகூட இருந்தது இல்லையா...,?''

'''முந்தானை முடிச்சு' சினிமால ஊர்வசி குழந்தைக்குப் பால் கொடுக்கறா மாதிரி ஒரு சீன். அவங்க நடிக்க மாட்டேன்னு சொன்னாங்க. அப்போ பாக்யராஜ் சார் 'ஓகே, இந்த சீன விஜி ஷூட் பண்ணுவா. நாங்க எல்லோரும் போயிடறோம்'னு சொன்னாரு. அவங்க ஒத்துக்கிட்டாங்க.

ஆனா எனக்கு அது முட்டாள்தனமா பட்டது. நான் மட்டும் இருந்து எடுத்தா மட்டும் என்ன? லட்சக்கணக்கானவங்க அதைப் பார்க்கப்போறதில்லையா என்ன? பட், அந்த 'சீன்' அந்தப் படத்திற்கு ரொம்ப முக்கியம். ஊர்வசியும் அதைக் கேட்டுட்டுத்தான் ஒத்துக்கிட்டு வந்திருக்காங்க. இப்போ முரண்டு பிடிக்கிறதால என்ன பிரயோஜனம்? இதையெல்லாம் நான் அவங்களுக்குச் சொன்னேன்.

அதே மாதிரி 'சின்ன வீடு' சினிமாவுல ஒரு முதலிரவுக் காட்சி. அதுல கல்பனா நடிக்கிறதுக்கு ரொம்ப கஷ்டப்பட்டாங்க. ரொம்ப 'வல்கரா' எடுக்க மாட்டோம்னு

படங்கள் — ஸ்டில்ஸ் ரவி.



# உங்கள் பூவிழிகளுக்கு மட்டுமே!




## ஐடெக்ஸ் ஐலைனர்

கண்களுக்கு எழில் கூட்டி மிளிரச் செய்யும் ஐலைனர். கீறல் விழாதது, வழியாது. தேவையானால் உரித்து எடுக்கலாம்.

Imageads 2627

ஐடெக்ஸ் – 48 ஆண்டுகளாக உங்கள் நம்பிக்கையின் மகத்தான சின்னம்.

அரவிந்த் லாபரடரீஸ், சென்னை 600 033.

சமாதானப்படுத்தினேன். இதெல்லாம் நிறைய படங்கள் ஒர்க் பண்ண ஆரம்பிச்ச பிறகு ஏற்பட்ட அனுபவங்கள்.

முதன் முதலா நான் அஸிஸ்டெண்டா வொர்க் பண்ணது ஐ. வி. சசி படத்துல தான். முதன் முதலா ஒரு லவ் சீனுக்குக் கேமிரா ஆங்கிள், 'ஷேடு' வைக்கறப்போ எனக்கு ரொம்பக் கஷ்டமாயிடுச்சு. ஹீரோ வோட சீன் அது. அந்த 'ஷூட்டிங்'குக்கு நான் வரமாட்டேன்னு சொல்லிட்டேன்...''

''இதெல்லாம்தான் என்னோட கேள்விக்குப் பதிலா...?''

''நானென்ன செய்யறது...?'' என்று சிரித்து நழுவுகிறார்.

''...இளம் பெண்ணான நீங்க பழைய படங்களையெல்லாம் பார்ப்பீங்களா? அப்போதைக்கும், இப்போதைக்கும் முன்னேற்றம் இருக்குன்னு ஃபீல் பண்றீங்களா...?

''நேத்து 'மங்கம்மா சபதம்' டீ. வி. யில பார்த்தேன். என்ன அருமையா பண்ணியிருக்காங்க. இத்தனைக்கும் அப்போல்லாம் தொழில்நுட்பம் மிகுந்த காமிராக்கள் இல்லாத காலம். அதுலயே எவ்வளவு அற்புதமெல்லாம் பண்ணியிருக்காங்க...!''

அதான் நான் செம்மீன் கேமிராமேனைக் கேட்டேன், எப்படி சார், இவ்வளவு அற்புதமா எடுத்திருக்கீங்கன்னு...?

''நாங்கள்லாம் அக்கறையா பண்ணோம் டியர்'' அப்படீங்கறார் சிரிச்சுக்கிட்டே.

இப்போ தொழில்நுட்பம், நுணுக்கம் எல்லாம் வளர்ந்தும்கூட, நேரமின்மை பெரிய பிரச்னை. பெரிய ஆர்டிஸ்ட் கொடுக்கற கால்ஷீட் டைம் கொறைச்சல். அதுல நாங்க எல்லாம் பண்ணியாகணும். அந்தக் காலத்துல வருஷக்கணக்கா குடும்பம் மாதிரி இருந்து நடந்த படப்பிடிப்புக்கள்ல இன்வால்வ்மெண்ட் இருந்தது. இப்போ அதையெல்லாம் பார்க்க முடியாது. அதனால தான் சொன்னேன், நான் அப்பவே பொறந்து அப்பவே செத்துப் போயிட்டு இருக்கணும்னு.

''அது பிரச்னைகள்லேருந்து நழுவற விதமாத்தான் இருக்கும். அதுசரி, நீங்க எடுத்ததுல உங்களுக்குப் பிடிச்ச காட்சி எது...?''

''அறுவடைநாள் முழுக்கவே எனக்கு ரொம்பப் பிடிச்சு இருந்தது. அருமையா எடுக்க முடிஞ்ச படம் அது. ஆனா ஒரு படப்பிடிப்பை என்னால மறக்க முடியாது. விஜய்காந்த் சண்டை போடற காட்சி. நான் தரையில படுத்துக்கிட்டு அந்தக் காட்சி எடுத்துக்கிட்டு இருந்தேன். அவர் எகிறிக் குதிச்சு என்னைத் தாண்டிப் போய் விழணும். ஒரு சின்ன ஸ்லிப் ஆகி என் கேமிரா மேலே விழுந்துட்டார். அப்படியே கேமிரா முகத்துல குத்திடிச்சு. நல்ல காலம் கண்ணுக்குக் கீழே ஒரு வடுவோட போச்சி. இந்த லைஃப்ல 'ரிஸ்க்' ஜாஸ்தி. படப்பிடிப்பிலேயே இறந்துபோனவங்க, ஊனமானவங்கநிறைய பேர் இருக்காங்க... ஆனா 'ஷூட்டிங்'



போது தன்னை மறந்து, தான் எடுக்கிற காட்சி சிறப்பா வரணும்கறதுக்காக எந்த 'ரிஸ்க்'கையும் எடுத்துக்கறோம். அப்பதான் நல்லாவும் அமையுது...''

''நீங்க பெண்ணுங்கறதால உங்களை ஒதுக்கினவங்க இருக்காங்களா...?''

''ஆரம்பத்துல சொல்லியிருக்காங்க. ஆனா எனக்குத் திறமை இருக்குங்கறதை நான் நிரூபிச்சுக் காட்டிட்டேன்னா அப்புறம் பேசறதுக்கே ஒண்ணும் இல்லையே. இப்போ எனக்கு அந்த மாதிரி பிராப்ளமே இல்லை. நான் பெண்ங்கறதே வேலை செய்யும்போது மறந்து போயிடுது. கலைமணி சார், இப்போ ஒரு படம் ஆரம்பிச்சிருக்கார். அது எனக்கு ஒரு நல்ல பேரை வாங்கிக் கொடுக்கும்னு நினைக்கிறேன்...''

''நீங்க திருமணம் செய்துக்கப் போறதா...'' என்று இழுத்தவுடன் மீண்டும் வெடிச் சிரிப்புத்தான்.

''...அது ஏதோ வதந்தி மாதிரி போட்டிருக்காங்க. நான் லிவிங்ஸ்டனைத் திருமணம் செய்துக்கப் போறதா நானேதான் சொன்னேன். நம்ப சினிமாப் பத்திரிகைகளில் இது ஒரு கஷ்டம். வதந்திகளைப் பத்திதான் எழுதறாங்க. இதோ இந்த அமெரிக்க சினிமா பத்திரிகையைப் பாருங்க, சினிமா தொழில் நுட்பங்களையெல்லாம் எவ்வளவு அற்புதமா எழுதியிருக்காங்க. ஆனா நம்ப நாட்டில இன்னும் இந்த மாதிரி பத்திரிகையே வரலை. நடிக, நடிகைகளின் வாழ்க்கையைப் பத்திதான் எழுதறாங்க.''

ஆனால் திருமண வாழ்க்கை பற்றி இன்னும் அவரே முடிவுக்கு வரவில்லையாம். வருங்காலக் கணவர்தான் இன்னும் நல்ல நிலைமைக்கு வரவேண்டும் என்று எதிர்பார்க்கிறாராம்.

''நீங்கள் எப்படிக் குழந்தைகளை, குடும்பத்தைப் பார்த்துக் கொள்கிறீர்கள், முழுநேரப் பத்திரிகையாளராக இருக்கும்போது போதியநேரத்தைக் குடும்பத்திற்கென ஒதுக்க முடிகிறதா? இந்தப் பிரச்னைகளை எப்படிச் சமாளிப்பது? எனக்குக் குழந்தைகள் என்றால் ரொம்பப் பிடிக்கும் என்று என்னைப் பேட்டி காண ஆரம்பித்து விட்டார்.

இவருடைய குழப்பம், பிரச்னை என்ன என்பதைப் புரிந்து கொண்டு சிரித்துக் கொண்டே விடைபெற்றேன்.

— மஞ்சுளா ரமேஷ்.

# வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுவீர்.
# பற்சிதைவை எதிர்த்திடுவீர்.




## கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தைப் பெற்றிடுவீர் !

வாய் துர்நாற்றம் இக்கட்டான சூழ்நிலையை உருவாக்குகிறது. சுவாசம் சுத்தமாக, புத்துணர்ச்சியுடன் திகழவும், பற்கள் உறுதியாக, ஆரோக்கியமாக விளங்கவும் முறையாக கோல்கேட் கொண்டு பிரஷ் செய்யுங்கள். அதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.



பற்களுக்கிடையே சிக்கிக் கொள்ளும் உணவுத் துணுக்குகளில் பாக்டீரியா வளர்ந்து, வாய் துர்நாற்றத்திற்கும் பற்சிதைவுக்கும் காரணமாகிறது.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயலாற்றல் மிக்க நுரை ஆழமாகச் சென்று, துர்நாற்றம் உண்டாக்கும் உணவுத் துணுக்குகளையும், பற்சிதைவை ஏற்படுத்தும் பாக்டீரியாவையும் நீக்குகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பிரஷ் செய்வதனால், சுத்தமான, புத்துணர்ச்சிமிகு சுவாசத்தையும், உறுதிமிகு, ஆரோக்கியமான பற்களையும் பெற்றிடுவீர்.

*கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும் பெப்பர்மெண்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !*

Rediffusion/CP/5707 f TM

# சந்தோஷ ஊற்றுகள்

ரஜினி சந்தானம்

"பேப்பர்ல என்னத்தை அப்படி சுவாரஸ்யமா பார்க்கறே கீதா?... சினிமா விளம்பரமா? மாமாவும் மாமியும் அமெரிக்கா திரும்பிப் போகும் வரை சினிமா பூத்தி பேச்சே வேண்டாம்... அவங்களுக்குப் பிடிக்காது..." குளித்ததலையின் ஈரத்தைத்துடைத்தபடியே, கீதாவின் தோள்வழியே பேப்பரில் பார்வையை ஓடவிட்டான் முரளி.

"அட.... ஜாப் ஆப்பர்சூனிட்டீஸ்'யா பார்த்துகிட்டு இருக்கே.... யாருக்காக பார்க்கறே கீதா?"

"ஏன் நானே வேலைக்கு போகக் கூடாதா?"

"நீயா...? ஓஹோ...ஹோ" என்று பெருங் குரலில் சிரித்தான்.

"அம்மா, மாமா, மாமி... ஓடிவாங்களேன்... இவ என்ன சொல்றா கேளுங்களேன்... வேலைக்குப் போகப் போறாளாம்...."

அவன் உதட்டை சுழித்துச் சொன்ன நிலை, அவன் குரலில் தொனித்த இகழ்ச்சி அவளை உலுக்கி விட்டது.

"ஏன்... நான் போக கூடாதுன்னு ஏதாவது சட்டமா....?"

"சட்டமா... உனக்குப் போய் எவன் வேலை தருவான்? பி.ஏ., எம்.ஏ., படிச்சவனெல்லாம் திண்டாடச்சே...வெறும்பி.யூ.சி. அது கூட பெயில்...."

"நாவொன்னும் பெயிலாகலை... கல்யாணம் நிச்சயமாயிட்டதால பரதியில நின்னு போயிட்டேன்."

"விடு ரீல். யார் கண்டா. நீ சொல்றது நிஜமானு. இதபார் கீதா உனக்குத் தகுதியான வேலை பேப்பர்ல வராது.

புரியாமல், குழந்தைத் தனமாய் அவனை ஏறிட்டு நோக்கினாள்.

"எங்க பாஸ், நேத்து கூட சொல்லி மூக்கால அழுதார். ஒரு வேலைக்காரிகூட கிடைக்கலையாம். நீ வேணும்னா போய் பாத்திரம் தேய்ச்சு குடுத்துட்டு வா. அதுக்குத் தான் லாயக்கு நீ."

குபுக்கென்று கண்களில் கண்ணீர் பெருக,

"பாருங்க அம்மா, என்னை கண்டா அத்தனை அலட்சியம். நான் எதுக்குமே உதவாதவனு நினைக்கிறார். இவர் கண்ணு முன்னால நான் எதாவது செஞ்சாகணும்."

"செய்யேன். யார் வேண்டாம்னாங்க. அதான் சொன்னேனே உனக்கு கூட்டபுளான வேலையை."

"செஞ்சாலும் செய்வேன். நீங்க என்ன சொல்றது? என்னிஷ்டம். என் உடம்புல வலிவு இருக்கும் வரை உழைக்கறதை ஒண்ணும் குறைச்சலா நினைக்கலை."

"கோச்சுக்காதே கீதா. அந்த வேலை பிடிக்கலைன்னா அப்பளாம் வடாம் இட்டு சம்பாதி. உன் குவாலிபிகேஷனுக்குத் தகுந்த வேலை."

"இருக்கட்டுமே. சின்னதா ஆரம்பிச்சு, அதையே பெரிய பிசினஸா நடத்தினாலும் நடத்துவேன். அதுக்கு முதல் போட உங்க கிட்ட பணம் கூட கேக்கமாட்டேன். பேங்கில் லோன் வாங்கிப்பேன். உங்க தயவே எனக்கு வேணாம்."

"கிழிச்சே போ. நீ பண்ற சமையலை தின்ன வேண்டிய தலைவிதி எங்களுக்கு மட்டும்தான். ஊர்ல இருக்கறவங்களுக்கு எதாவது செஞ்சு குடுத்தே, உன்னை இந்தத் தெருவை விட்டே துரத்திடுவா. ஜாக்ரதை.

அவன் அலட்சியத்தைத் தாங்க இயலாமல் துடித்துப் போய் நின்றாள் கீதா.

"ஆமா, இந்தத் தெருவிலேயே எத்தனையோ வேலைக்குப்போற பெண்கள் தங்கள் குழந்தைகளை எங்க விடறதுனு தெரியாம திண்டாடுவாங்களே. ஏங்கீதா. நீ ஒரு 'கிரஷ்' ஆரம்பிச்சா. என்னா."

மாமி முடிப்பதற்குள் —

"ஐயோதேவுடா. இவபெத்தரத்தினங்கள்

ரெண்டும் மூக்கு வழிய ரோட்டுல சொறி நாயாட்டம் திரியறதுங்க. அதுங்களை கவனிக்க துப்பில்லை இவளுக்கு. ஊர் குழந்தைகளைப் பார்த்துக் கோன்றீங்களே மாமி நாங்க நல்லபடியா இருக்கறது பொறுக்கலையா உங்களுக்கு.''

''இங்க குழந்தைகளை கொண்டு விட்டா, அவங்ககிட்ட பணம் வாங்குவேன். அதனால கவனமா பார்த்துப்பேன். நீங்களென்ன எனக்கு வாரி குடுத்திருக்கீங்க. மேலும் 'நான் பெத்த ரத்தினங்கள்' அப்படியே குணத்துல உங்களை உரிச்சுண்டு வந்திருக்குங்க. நான்னாலே ஒரு அலட்சியம்.''

மூக்கை உறிஞ்சுகிறாள் சீதா. மாமாவும் மாமியும் சுவாரஸ்யமாய் கவனிக்கிறார்கள் அவர்களின் வாக்கு வாதத்தை.

ஆனால்/ முரளியின் தாய் சாரதாவுக்கு மட்டும் முகம் சிவந்து போகிறது. கோபத்தில் உடல் நடுங்க துவங்குகிறது. அவர்களை முறைத்துப் பார்த்துவிட்டு பார்வையை, ஜன்னலுக்கு வெளியே செலுத்துகிறாள்.

ஒரு வாரத்திற்கு முன்புதான்... முரளியையும் சீதாவையும் அருகில் வைத்துக் கொண்டு,

''ஒண்ணுமில்லை. இதெல்லாம் ஒருவகை தாழ்வு மனப்பான்மைதான். தன் பையன்



தன்னை மதிக்காமல் எவளோ ஒரு வெள்ளைக்காரியை கல்யாணம் பண்ணிண்டுட்டானே யாராவது தன்னைப் பார்த்து ஏதாவது கேட்பதற்கு முன்... தானாய் அவர்களை மட்டம் தட்டி வாய் திறக்காமல் செஞ்சுடணும்கிறஎண்ணம்தான் அண்ணாவுக்கும் அதனாலதான் எல்லார்கிட்டேயும் எதையாவது குறைகண்டுபிடிக்கிறார்கள். வாய்க்கு வாய் இந்தியப் பெண் கூட எங்க அமெரிக்க மருமகளைப் போல் இத்தனை உசத்தியா குடித்தனம் செய்ய மாட்டா. என் பையன் நில்லுன்னா நிக்கறா. உக்காருன்னா உக்கார்றா. ஒரு வார்த்தை எதிர்த்துப் பேசுவது இல்லைன்னு எல்லாம் கதை விடறார். அவாளுக்குத் தைரியம்... நாம யாரும் அமெரிக்கா போய் அவங்களைப் பார்த்துடப் போறதில்லையேன்னு... எதுக்குச் சொல்றேன்னா... நீங்க ரெண்டு பேரும் அவா வந்து நம்ம கூட தங்கப் போற ஒரு வாரமும் பல்லைக் கடிச்சுண்டு, வாக்கு வாதம் பண்ணாம இருங்கோ. நீங்க சண்டை போட்டா... உங்களை மட்டும் பார்த்துச் சிரிக்க மாட்டா... என்னைப் பார்த்து – 'என்னம்மா சாரதா... குடும்பப்பாங்காப் பெண் வேணும், அடக்க ஒடுக்கமாக் குடும்பம் நடத்தணும்னு சொல்லிண்டு வலை போட்டுத் தேடிப் பிடித்தானே மருமகள்... என்னமா கேள்வி கேக்கறா புருஷனைன்னு... நான் நாக்கைப் பிடுங்கிக்கறாப்பல மூஞ்சிக்கு எதிரே கேட்டுடுவா...'' – இந்தக் கடைசி வாக்கியத்தை ஒருவேளை சொல்லி இருக்க வேண்டாமோ. அவர்கள் மனத்தில் பதிய வேண்டும் என்ற ஆதங்கத்தில் அதிகமாகவே சொல்லி விட்டாளோ...

கீதாவின் முகம்கன்டிப்போயிற்று-முரளியும் தலையைக் குனிந்து கொண்டான்.

**நா**ன்கு நாட்களாய் அவர்கள் சாதிக்கும் மௌனம் சாரதாவிற்குள் லேசாய் ஓர் இரக்கத்தை ஏற்படுத்தினாலும், அண்ணாவும் மன்னியும் இருக்கும் வரை இந்த மௌனம் நீடிக்க வேண்டுமே என்று பிரார்த்தித்தாள். ஆனால்... நாலே நாட்களுக்குள் அவர்கள் தங்களின் சுய உருவத்தை வெளிப்படுத்திய போது... குன்றிப் போனாள்.

இனி அடுத்ததாய் அண்ணலின் ஏளன வார்த்தைகளைக் கேட்க வேண்டுமே என்று நொந்து போய்த் தலைகுனிந்து நின்றிருந்தாள் சாரதா.

யார் பேசுவது....?

அண்ணாவா...? அதுவும் மெதுவாய், ஏளனம் எதுவும் கலக்காமல்... அறிவுரை சொல்வது போல்... சாந்தமாய்...

நிமிர்ந்து பார்த்தாள் சாரதா.

''முரளி... நீ ரொம்ப மோசம்... உன்னை மட்டும் சொல்றதுல பிரயோசனம் இல்லை... இங்கே இருக்கும் முக்கால்வாசி ஆண்களையும் சொல்லணும். பெண்களுக்கு வழி காட்டுங்க, முன்னேற விடுங்கன்னு வாய்ல பேசிடறது... ஆனா, வீட்டுக்குள்ளே ஒரு பெண் எதைச் செஞ்சாலும் ஒரு குறை கண்டுபிடிக்கணும். அவள் உற்சாகத்தை முதல் வேலையா வடிய வெச்சுடணும்னு நடந்துக்கறாங்க... கீதா, தனக்குன்னு ஒரு ரெகக்னிஷன் வேணும்னு ஆசைப்படறதுல என்ன தப்பு...? இங்கே மட்டும்தான் இப்படி... படிக்கிறது எல்லாம் வெறும் ஏட்டுச் சுரைக்காயா இருக்கு... அமெரிக்காவிலே அப்படி இல்லை... பாரேன்... ஏதாவது விசேஷம்னா, பண்டிகைன்னா, பார்ட்டின்னா உன் மாமி அதிகமாகச் சமைத்தால்... இல்லை... வீட்டிலே குழந்தைகளுக்குன்னு லீவு நாள்ல கொறிக்க ஏதாவது ஸ்பெஷலா முறுக்கு அதிரசம்னு செஞ்சு வெச்சா... அங்கே என்ன பண்ணுவா தெரியுமா...? தனியா உன் மாமிக்கு பிரசண்ட் பண்ணுவா... மாமிக்கு ஹெல்ப் பண்ண எனக்கு பிரசண்ட் பண்ணுவா. நாங்க அவர்களுக்குப் பண்ற ஒவ்வொரு சின்னச் சின்ன வேலைக்கும்... வேலைன்னு சொல்ல மாட்டா – அதை அவா ஹெல்ப்புன்னுவா... ஒரு, ஒரு பரிசு... கைகளைப் பிடிச்சுண்டு தேங்க்யூன்னு உணர்ச்சி பூர்வமா சொல்லுவா. மனசுல சந்தோஷம் கரைபுரண்டு ஓடும். ஒருத்தருக்கொருத்தர் அந்தஸ்து, வயசு, உறவுன்னு வித்தியாசம் பார்க்காம எதையாவது கொடுத்துப் பாராட்டிப்பா. மனத்தைத் திறந்து வெளிப்படுத்திப்பா...''

''அப்போ... உன் பிள்ளைகிட்ட பணமோ, பரிசோ ஏதோ ஒண்ணை வாங்கிண்டுதான் குழந்தைகளையும், வீட்டையும் பார்த்துக்கறியா அண்ணா... பாசம், ஆசைன்னு பேசறதெல்லாம் அங்கே கிடையாதா...?''

அண்ணனை மட்டம்தட்ட சந்தர்ப்பம் கிடைத்த மகிழ்ச்சியில் கேட்டு விட்டாள் சாரதா.

''நீ அதைச் சம்பளம்கிற பேர்லே சொல்றே... என் பிள்ளை பரிசுன்ற பேர்ல கொடுக்கிறான்... என் மருமகள் – ஷார்லி– என் வேலையைச் சுலுவாக்க, உங்களை வைத்திண்டு நீங்க செய்யற, உதவிக்கான

நிறைய பொம்மை இருப்பதால் மட்டுமே ஒரு கொலு நிறைவானதாகி விடாது. நாலே பொம்மை இருந்தாலும், மேஜையின் மீது அழகாய் பொம்மைகளை வைத்து, மணியாய்க் கோலமிட்டு விளக்கு ஏற்றி வைத்தாலும், அது அகிலம் காக்கும் அன்னை கொலுவிருக்கும் இடம் ஆகிவிடும்.

— கனகவல்லி.

Gulistan ஊதுவத்தி.

காலைக் கதிரவனின் பார்வையில் மலர்ந்த ரோஜா மலர்கள்.






A Padmini® product

323, காமராஜ் சாலை, பெங்களூர்-560 042.

MUDRA BLR PP 115 88

காணிக்கைன்னு சொல்றா... குழந்தைங்க தாத்தா, பாட்டி இது உங்க ஷேர்னு சொல்றா... எந்த அர்த்தத்துல சொன்னாலும் அதன் மதிப்பு உசத்திதான். எல்லாம் அவங்கவங்க மனசுல ஏற்படற அன்பின் வெளிப்பாடுகள்தான்னு நாங்க நினைக்கிறோம். நாமே ஒண்ணும் புரியாத சின்ன குழந்தைகளை பார்த்தா என்ன பண்றோம்...? கன்னத்தில் தட்டி, சாக்லேட் குடுக்கலையா...? நாம அந்தக் குழந்தையை விரும்புவதை வெளிப்படுத்தற வழி இல்லையா அது... புரிந்ததா...? அதே மனப்பான்மைதான் அங்கே இன்னும் இருக்கு முரளி. நீயும் கீதாவுக்கு ஏதாவது பரிசு கொடு... பணமாத்தான் குடுக்கணும்னு இல்லை... மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு இந்த மாதிரியான வெளிப்பாடுகள் மிக மிக அவசியம்... இந்தா, நீ செய்யற வேலைக்குச் சம்பளம் இல்லை. ஒரு பிரசண்ட்னு தூக்கி எறிஞ்சு கொச்சைப் படுத்தாதே. என் சந்தோஷத்துக்கு நீ உதவினதுக்கு நன்றின்னு சொல்லிக் கொடு. அதன் மதிப்பும் கூட உயர்ந்துடும்..."

"அவளுக்குத்தான் நான் துணி, மணி வாங்கிக் கொடுத்துச் சோறு போட்டு எல்லாத்தையும் செஞ்சுடறேனே... தனியா பிரசன்ட் என்ன வேண்டி இருக்கு? எதைக் குடுக்கறது...?"

"அதானா பேச்சு... அவளை நீ மனைவியா ஏத்துண்டதுக்கு, உன் குழந்தைகளுக்கு தாயானதுக்கு நீ செய்ய வேண்டிய கடமைகள்தான் அவை. ஆனா, அதையெல்லாத்தையும் விட உங்கள் தேவையை அறிந்து ஹெல்ப் பண்றாளே, [illegible] ஹெல்ப் பண்றாளே, எக்ஸ்ட்ரா ஹெல்ப்பும் பண்றாளே, அதுக்கு..."

"பணம் குடுக்கச் சொல்றீங்களா...? குடுத்தா ஒரே நிமிஷத்துல செலவழிச்சுடுவா..."

"அதைப் பத்தி உனக்கு என்ன? அவளுக்குன்னு கொடுத்த பிறகு அதைப் பற்றிக் கேட்க உனக்கு உரிமை இல்லை... இங்கேதான் நாம தப்பு பண்றோம். நீ கொடுத்த பணத்தைப் பத்திக் கணக்குக் கேட்டுக்கிட்டு இருந்தா... அது உன் பணம்றதுதான் மனத்தில் நிற்கிறது. அதைப் பற்றி மறந்துடு... அப்போ அந்தப் பணத்தைத் தனக்குக் கிடைத்த கௌரவமாய் நினைத்து அவள் எத்தனை பத்திரப்படுத்துகிறாள் என்று தெரியும் பார். எப்போதான் நாம் மனசுக்கு மதிப்புக் கொடுக்கக் கத்துக்கப் போறோமோ தெரியலை. மனசின் வெளிப்பாடுகள் பணமாய், பரிசாய்த்தான் இருக்கணும்னு இல்லை. அன்பான இதமான வார்த்தைகளாகவும் இருக்கலாம்... அந்த வார்த்தைகளுக்கு முன் எந்தப் பொருளுக்கும் மதிப்பே இருக்காது. உணர்ந்துதான் புரிஞ்சுக்கணும் நீங்க. இந்த மாதிரி சந்தோஷங்கள் நம்ம எல்லார் மனசிலும் இருக்கு. ஆனா நாமதான் போலியாக அதை உறைய வெக்கறோம்..."

ஆச்சரியமாய்ப் பார்த்தாள் சாரதா.

விழிகள் அகல நின்றிருந்தார்கள் முரளியும் கீதாவும்.

'அண்ணா நீ நிஜமாகவே பெரியவன்தான்' என்று நினைத்துக் கொண்டாள் சாரதா.

---

# இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள்: மழைக்கால உணவு  கடைசி தேதி: 15.10.88.

**சமையல் கூப்பன்**

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்



# பண்டிகைகளில் உறவு பேதங்கள்!

நவராத்திரி என்றால் யாருக்குத்தான் பிடிக்காது? அந்த ஒன்பது நாட்களிலும் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை மிகுந்த குதூகலத்துடன்தான் காணப்படுகிறார்கள்.

நாளைக்கு எப்படி, எந்த வகையில் டிரஸ் செய்து கொள்ளலாம் என்று குழந்தைகளும், நாளைக்கு என்ன சுண்டல் அல்லது பட்சணம் செய்யலாம் என்று பெண்களும், நாளைக்குப் பெண்கள் பட்டாளத்தின் நடுவே எப்படிச் சுதாரித்துக் கொள்வது என ஆண்களும், முதல் நாளிலிருந்தே யோசனை பண்ணுவது ஒன்றும் புதிய விஷயமில்லை. அந்த ஒன்பது நாட்களையும் நல்லபடியாக ஒப்பேற்றி சரஸ்வதி பூஜையையும் முடித்தால் அம்மாடி என்ற பெருமூச்சு தன்னையறியாமல் வெளி வருகிறது.

மற்ற பண்டிகைகளெல்லாம் ஒருநாள் கூத்தாக இருக்கும். வீட்டில் சிறிது நேரம் களேபரம் இருந்தாலும் சற்று நேரத்தில் ஓய்ந்து விடும். ஆனால் நவராத்திரி பண்டிகைக்கு முதல் இரண்டு நாட்கள் முன்பிலிருந்தே பொம்மைகள் எடுத்து வைப்பதும், படிகளைத் தயார் பண்ணுவதும் ஆரம்பமாகி விடும். முடிந்த பின்னும் இரண்டு நாட்கள் பொம்மைகளைப் பத்திரமாக பேப்பரோ, துணியோ கொண்டு பத்திரமாகச் சுற்றி வைத்து வீட்டைச் சுத்தம் செய்து கொள்ளவே நேரம் சரியாக இருக்கும்.

இப்படி அமர்க்களப்படும் அந்த ஒன்பது நாட்களிலும் ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு மாதிரி மனத்தாங்கல் வீட்டு மனிதர்களிடையே ஏற்பட வாய்ப்பு ஏற்படுகிறது.

சிலரது வீட்டில் 'கொலு பொம்மை பெட்டி' என்ற பெயரில் ஒரு இடியானது பரணில் ஏறி உட்கார்ந்திருக்கும். மனைவிமார்கள் கணவன் ரெஸ்டில் ஞாயிறு அன்று இருப்பதைப் பார்த்து "அதைக் கொஞ்சம் இறக்கினால் சௌகர்யமாக இருக்குமே" என்று விண்ணப்பிப்பார்கள். கணவரும் தன்னை ஒரு சாம்சனாக நினைத்துக் கூறிய மனைவியின் எதிரில் ஒரே தம்மில் பெட்டியை கீழே இறக்க எத்தனித்துத் தோற்றுப் போவார். அதை வெளிக்காட்டாமல் "இந்த முறைவாசலுக்குத்தான் ஆபீஸில் ஞாயிறு லீவு விட்டிருக்கிறானோ" என்றபடி ஒரு முறைப்பில் மலில் விட்டுச் செல்வார்.

ஒருவழியாக கீழே இறங்கிய பெட்டியைச் சுற்றி மழலைகள் வட்டமிட்டு, ஒவ்வொரு பொம்மையையும் அப்பொழுதுதான் புதியதாக பார்ப்பது போல் 'ஹை...ஹை...' என்று கோஷமிட்டு, ஒன்றிரண்டை உடைப்பதும், பதிலுக்கு தாய்மார்கள் அவர்கள் முதுகில் தன் கைவரிசையை காண்பிப்பதும், பொம்மை உடைந்த பயம், அம்மா அடித்த வலி இரண்டுக்கும் சேர்த்து அக் குழந்தை பிலாக்கணம் பாட ஆரம்பித்து விடும்.

தினமும் குழந்தைகள் டிரஸ் மாற்றும் ஒரு ஆவலில் அவிழ்த்ததை அப்படியே போட்டு விட்டு சென்று விடுவார்கள். நாமும் கை வேலையில் அதை உடனே எடுத்து வைக்க மறந்து, ஒருவர் உள்ளே நுழைந்ததும், "வாருங்கள்" என்று கூடச் சொல்ல மறந்து அசடு வழிந்தபடியே பின்புறமாக கையில் மறைத்தபடி எங்கேயாவது நுழைத்து விட்டு



தேவைப்படும் பொழுது தேட ஆரம்பிப்போம்.

சாயந்திர வேளையில் களைப்புடன் வீடு திரும்பும் கணவன் புழக்கத்திற்கு இடம் போதாமையால் 'சிடுசிடு' என்று இருப்பார்.





சில கணவர்களுக்கு, எதையும் கையில் எடுத்துக் கொடுத்துப் பழக்கமாகி இருக்கும். அவர்களுக்கு மனைவிமார்களை கூப்பிட்டு பக்கத்தில் வைத்துக் கொண்டால்தான் எந்த வேலையுமே ஓடும். அவர்களின் குரலுக்கு மனைவிமார்கள் இல்லாமல் திண்டாடுவார்கள். இது இன்னும் அவர்களின் கோபத்திற்கு தூபம் போட்டது போல் இருக்கும்.

இவையெல்லாம் சிறிய விஷயங்கள் தான். ஆனால் ஒரு நாள் கிழமை என வரும் போது பெரியவர்களிடையே ஏற்படும் மனத்தாங்கல்தான் மிகவும் கொடுமையானது எனலாம்.

சாதாரண நாட்களில் சாதாரணமாக இருக்கும் இந்த உறவுகள் பண்டிகை என வரும் போது மட்டும் ஏன் முறுக்கேறி விடுகின்றன எனத் தெரியவில்லை. அதிலும் பெண்களை பெண்களே ஆட்டிப்படைக்கும் நிலைமைதான் அதிகம்.

இதில் பிரதான பாகம் வகிப்பவர் 'வீட்டுப்பெண்' எனச் செல்லமாக அழைக்கப்படும் நாத்தனார்கள்தான். திருமணமாகிப் போயிருப்பவர்கள் என்றால் இன்னும் கேட்கவே வேண்டாம். அவர்களைப் போய் கூப்பிட்டு விட்டு வர வேண்டும். வந்தவுடன் விழுந்து விழுந்து உபசாரம் செய்ய வேண்டும். ஒரு சிறு தவறு நடந்து விட்டாலும் அவர்கள் அம்மா என்றும் பாராமல், மன்னி என்றும் பாராமல் தூக்கி எறிந்து பேசுவார்கள்.

''இவ்வளவு சின்னதா எப்படி மன்னி உங்களால வடை தட்ட முடியறது? பரவாயில்லை, ரொம்ப சாமர்த்தியம்தான்'' என்று கிண்டலில் திராவகம் மிதக்கும்.

வாங்கித் தரும் புடைவையினால்தான் முக்கால்வாசி சண்டையே ஆரம்பிக்கும். ''ஏன் இதைவிட குறைச்சல் விலையில் புடைவையே இல்லையாக்கும்'' என ஆரம்பித்து 'முசுமுசு'வென அழுவார்கள்.

அடுத்தது வீட்டிலேயே இருக்கும் மாமியார். தன்னை மதிக்கவில்லை, தனக்குப் பிரதான பாத்திரம் கொடுக்கவில்லை என 'தலைவலி' கட்டு கட்டிக் கொண்டு மூலையில் சுருண்டு விடுவார்.

சில இடங்களில் மருமகள் பூசலை ஆரம்பிப்பாள். ''இந்த மாதிரி ஒரு பண்டிகை தவறாம உங்க பொண்களை கூப்ட்டு வச்சு தாம்தூம் பண்ணுங்கோ. நாங்க தலையில துணிய போட்டுக்கிட்டு போக வேண்டியதுதான்'' என பத்ரகாளியாய்ச் சீறுவாள்.

இப்படி நாள் கிழமைகளில், சந்தோஷமாக இருக்க வேண்டிய நாட்களில் ஆளுக்கொரு பக்கமாக முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு வேண்டா வெறுப்பாக மனத்தை ஈடுபடுத்துவது தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று.

குடும்பம் குதூகலமாகவும், மங்களகரமாகவும், ஒற்றுமையுடனும் இணைந்து வாழத்தான் பண்டிகைகளே வருகின்றன. அதை விடுத்து அந்நாட்களில் சந்தோஷமில்லாமல், மனத்தாங்கல்கள் மிகுந்து இருந்தால் எந்தப் பண்டிகையும் கொண்டாட வேண்டிய அவசியமே இல்லை. அவரவர் நிலைமையைத் தெரிந்து கொண்டு நட்பு, அன்பு, பாசம் இவற்றை வளர்ப்பதற்காகவே வருகின்ற பண்டிகைகளை சந்தோஷமாக ஏற்றுக் கொள்ள பெண் மனங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

— மாலதி சந்திரசேகரன்.



# இப்போது ஹார்லிக்ஸ் கூடுதல் கால்ஷியத்துடன்



"வளரும் குழந்தைகளுக்கு கூடுதல் கால்ஷியம் தேவைப்படுகிறது."

ஹார்லிக்ஸ் இப்போது கூடுதல் கால்ஷியத்துடன் செறிவூட்டப்பட்டிருக்கிறது—வளரும் குழந்தைகளின் வலுவான பற்களுக்கும், ஆரோக்யமான எலும்புகளுக்கும், குடும்பத்தினர் அனைவரின் ஆரோக்யத்திற்கும் மிகவும் முக்கியமானது.

ஹார்லிக்ஸ் முழுவதும் இயற்கை ஊட்டச்சத்துக்கள் நிறைந்தது—புரோட்டீன், விட்டமின்கள், மினரல்கள் மற்றும் கார்போஹைட்ரேட்டுகள்—இவை சக்தியும், ஊட்டமும் அளிக்கின்றன. இப்போது கூடுதல் கால்ஷியத்தினால், கூடுதல் ஆரோக்யம்.

**சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்**




HTA-6037 TAM

# சில யதார்த்தங்கள்

''வாஸ்தவம்தான்... வாசலை காக்க வேண்டும். சாயந்திர வேளை வேறு....''

இன்றைக்கு இவருக்கு என்ன ஆயிற்று என்று தோன்றியது ராஜிக்கு.

இந்த மாதிரி ஒரு ஆச்வாசத்துடன் மாடியில் அமர்ந்து எத்தனை நாளாயிற்று என்று தோன்றியது ராகவனுக்கு. கைப்பிடி சுவரைத் தொட்டுப் பார்த்தார். 'சுண்ணாம்பு அடிக்க வேண்டும்...

**வீ**ட்டிற்குள் நுழையும் போது ராஜி 'மொபைல் அயர்னி'டமிருந்து பேண்ட், ஷர்ட்களை வாங்கிக் கொண்டிருந்தாள். ராகவன் செருப்பை கழற்றி வைத்து விட்டு, மௌனமாக சோபாவில் அமர்ந்தார்.

''இன்னிக்கு ஏன் இத்தனை நேரம்....''

''கொஞ்சம் வெளியே போக வேண்டியிருந்தது. ஆபீஸ்லேர்ந்து அப்படியே போயிட்டேன். இரவு சாப்பாடு வேண்டாம்... கொஞ்சம் நீர்க்க மோரில் உப்பு போட்டுத் தா.....''

ராஜி கொடுத்த டம்ளரை வாங்கியவர் சற்று நேரம் உற்று பார்த்தார்.

''எங்கே வீட்டில் யாரையும் காணோம்... குழந்தைகள் கூட இல்லை.....''

''காமினி வீட்ல சின்ன விருந்தாம். அதனால குழந்தைகளைக் கூட்டிண்டு போயிட்டா.... சுந்தர் நேரே ஆபீஸ்லேர்ந்து அங்கே வந்துடுவான்னான்... ரவி மாலினியையும், மீராவையும் கூட்டிண்டு காலையிலேயே போனான்... இன்னும் ஆளையே காணோம்.....''

''மூர்த்தி....'' கேட்டவர் சற்று மௌனமானார்.

அவன் டிரான்ஸ்பர்க்கு ஆர்டர் வந்து விட்டது இன்னும் அவளுக்குத் தெரியாது. அதை ஒப்புக் கொள்வதும், ஒப்புக் கொள்ளாததும் அவன் விருப்பம்... என்ன செய்யப் போகிறான்....

''ராத்திரி ஒண்ணும் வேணாம்னா, கொஞ்சம் உள் காரியத்தைப் பாத்துண்டு வந்துடறேன்.... ஒரு நிமிஷம் இருங்கோ.''

''இந்த உள் வேலை உன்னை விட்டாலும், நீ அதை விட மாட்டாய்... சரி...''

என்றவர், மேலோட்டமாக 'பிரெஸ்' செய்து வைத்திருந்த துணிகளை மேற்பார்வை இட்டார்.

''ஏன் உன் புடைவை ஏதுமில்லை....''

''விளையாட்டு உங்களை விட்டு போகவேயில்லை...''

''சரி... நான் மாடியில் காற்றாட இருக்கிறேன். நீயும் வாயேன்....''

தயங்கினாள்.



சந்தடிகள் இன்னும் அடங்கவில்லை. பல வருடங்களுக்கு முன்பென்றால் கடற்காற்று பிய்த்து உதறும். இரவில் சில சமயம் அலை ஓசை கூட கேட்கும். இப்போது சுற்றுபுற ஓசையில் எல்லாமே அடங்கி விட்டது போன்ற பிரமை.

இன்னும் ஒரு வாரத்தில் ரிடையர்டு ஆகப் போகிறார். ராஜி அதைப் பற்றி தீவிரமாக சிந்தித்துப் பார்த்ததாக அவருக்குத் தோன்றவில்லை. இதே மாதிரியே அவர் பாட்டுக்கு ஆபீஸ் போய் மாதா மாதம் இதே மாதிரி பணம் வந்து கொண்டிருக்கும் என்று நினைக்கிறாளா ஒருவேளை... அவளிடம் நயாபைசா சேமிப்பு இருக்கும் என்ற நம்பிக்கை கூட இல்லை. முந்தா நாள் இருநூறு ரூபாய் வாங்கினாள். நிச்சயம் இன்று இரவு மீண்டும் கேட்பாள் என்று தெரியும். சம்சாரம் இத்தனையா . குடிக்கும்....

புளித்த மோர் நிறைய இருந்தால், புழுங்கலரிசியை நன்றாகக் கல்போகக் களைந்து, கொஞ்சம் வெந்தயமும் சேர்த்து, புளித்த மோரில் ஊற வைத்து, அரைத்து சுமார் 1 மணி நேரம் கழித்து அல்லது மறுநாள் தோசை செய்து சாப்பிட்டால், வயிற்றுப் புண், வாய்ப்புண் ஆகியவை ஆறும். இது என் அனுபவம்.

— பானுநகர் பார்வதி.

இரண்டு மூன்று நாட்கள் முன்பு நண்பர்கள் வற்புறுத்தலில் பீச்சுக்குப் போனவர், அவர்கள் சென்ற பின்பும் சற்று தனியாக இருக்க விரும்பி அந்த படகின் அந்தப்புறம் கடலைப் பார்த்து உட்கார்ந்தார்.

மறுபக்கத்திலிருந்து வந்த பேச்சுக் குரல் அவரைக் கவர்ந்தது.

''இதெல்லாம் அனாவசிய கவலை காமினி....''

''இல்லை.... பண விஷயத்தில் கறாராக இருப்பதுதான் நல்லது. இத்தனை நாள் அப்பா சம்பளம் முழுவதும் அம்மா செலவழித்துக் கொண்டிருந்தார். இனி நம் பொறுப்பாகி விடும். நீங்கள் கறாராக உங்கள் தம்பிகளிடம் சொல்லி விடுங்கள். மாதா மாதம் ஆளுக்கு இவ்வளவு என்று தர வேண்டும். இல்லாவிட்டால் நம் பாடு திண்டாட்டம்....''

''அப்புறம் அப்பாவுக்கும் பணம் வேண்டும்.....''

''அதை அவர் பாத்துப் பார்.. நீங்கள் முந்திரி கொட்டை மாதிரி மூக்கை நீட்டாமல் இருந்தால் சரி... உங்களுக்கு இரண்டு குழந்தைகள் நினைவிருக்கட்டும்....

ராகவன் அலைகளைப் பார்த்தவாறே அமர்ந்திருந்தார். மெல்ல இருள் சூழ ஆரம்பித்தாலும், அவர் மனத்திற்குள் ஏதோ வெளிச்சமிட்டது போல் இருந்தது. இன்னும் கூட வெளிச்சம் வரும்... தானாக.... என்று அவர் நம்பினார்....

அதுவும் வந்தது தானாக.....

இரண்டு நாட்கள் முன்பு, ஞாயிற்றுக் கிழமை மாலை, உலாவக் கிளம்பியவர், அந்த கோவிலின் முன்பு நின்றார். ராஜியையும் அழைத்து வந்திருக்கலாமோ என்று தோன்றியது.

'ஊஹூம் அவள் வரமாட்டாள்...'

பிரகாரத்தில் நுழைந்தவா சற்றுத் தள்ளி தூணின் அருகில் அமர்ந்து தேங்காயை சாப்பிட்டுக் கொண்டிருந்த ரவியைக் கண்டார். ஒருவேளை மாலினியும் வந்திருக்கலாம். அவர்கள் தனிமையைக் கெடுப்பானேன்.. என்று மெதுவாக நகர்ந்தவர், காலில் ஏதோ குத்தவே, சற்று தள்ளி மற்றொரு தூணை தாங்கி நின்று குனிந்து காலைப் பார்த்தார்.

''நான் சொல்வது புரிகிறதா...?''

''எனக்கு என்னமோ நீ இதைப் பற்றிப் பேசுவதே பிடிக்கவில்லை மாலினி...''

''இத்தனை நாள் பேசினேனா... பேச வேண்டிய சமயம் பேசித்தானே ஆகணும்.....''

''சரி... என்னதான் சொல்கிறாய்....''

''உங்களுக்கு என்றைக்குமே சாமர்த்தியம் போதாது.... கடைசியில் வீட்டு செலவு பூரா உங்கள் தலையில் விடிந்து விடும். அம்மா அப்பாவுக்கு மருந்தே நிறைய ஆகி விடுகிறது.....''

''இப்போ என்னதான் செய்யச் சொல்கிறாய்.....''

''நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம்... அப்பப்போ நான் சொல்வதைக் கேட்டால் போதும்....''

இத்தனை வருடமாக அதைத்தானே செய்து கொண்டிருக்கிறான் என்று நினைத்துக் கொண்டார் ராகவன்.

பாலு ஓடி வந்தான்.

''என்ன தாத்தா இங்கேயே இருக்கிங்கோ. உங்களை எங்கெல்லாம் தேடினேன்....''

ராகவன் பதில் பேசாமல் அவனைப் பார்த்தார். சிரிப்பு வந்தது.... சுந்தரின் சாயல் நெற்றியிலும் மூக்கிலும். சுந்தர் அவரது பிரதி பிம்பம் என்று பார்த்தவர் சொல்வார்கள்....

''என்ன தாத்தா பேச மாட்டேங்கறேங்கோ....''

ராகவன் அவன் கரம் பிடித்துக் கீழே இறக்கினார்.

# கோலாகல வரவேற்பு!

வீடு நோக்கி வருவோருக்கு
நல்வரவளிக்க...சின்னதாய் ஒரு
யோசனை போதும். சின்னதாய்
உதவி புஷ் தரும்.

வீட்டுக்குள் நுழையும்போதே
மணம் மூக்கைத் துளைக்கிறது.
புத்தம் புதிதாய் செய்த கேக்...
நித்தம் நாவில் நீரூரச் செய்யும்
இளஞ்சிவப்பு-மஞ்சள் நிறம்
இணையாக பதாம், வெனிலா
மணம். அடடே! அருமையான
தேங்காய் பர்ஃபி (தெவிட்டாத
தீஞ்சுவை). வாயில் போட
வேண்டியதுதான் பாக்கி! இளஞ்
சிவப்பு-பச்சை வண்ணத்தில்
வெனிலா சுவையுடன் ஏலக்காய்
மணமும் கூடியது.

**BUSH**

புஷ் ஃப்ளேவர்ஸ்
மற்றும் கலர்களில்
சர்வதேசப்புகழ்
பெற்ற பெயர்



18 ஃப்ளேவர்-
களுக்கும் மேல்

BUSH BOAKE ALLEN
(INDIA) LIMITED
St. Thomas Mount
Madras 600 016.

*Marketed by Parry's.*




...sia's-BBAL-520/87 TAM D

''தாத்தா.... இன்னிக்கு ஸ்கூல்ல என்னாச்சு தெரியுமா.....''

பாலு சொன்ன கதைகளை சந்தோஷமுடன் கேட்டார். மீராவுக்கு பாட சந்தேகங்களை எப்பொழுதும் போல் விளக்கினார். சுந்தருடன் அரை மணி பாலிடிக்ஸ் பேசினார். சுந்தர் படுக்கப் போன பின் ராஜி மெதுவாக வந்தாள்.

''என்ன......''

''கொஞ்சம் பணம் வேணும்....''

''முந்தா நாள்தானே இருநூறோ என்னவோ தந்தேன்....''

''அது.....''

''பணம் மரத்தில காய்க்கிறதா... உன் வீட்டு தோட்டத்திலா.....''

ராஜி திடுக்கிட்டு அவரைப் பார்த்தாள். மிரண்டாள்.

ராகவன் சிரித்தார் மென்மையாக.....

''பயந்துட்டயா... நாளை தருகிறேன்... இப்பவே வேண்டுமென்றால், ஷர்ட் உள் பாக்கெட்டில் வைத்திருக்கிறேன்... எடுத்துக்கோ.....''

''சரி....'' ராஜி மீண்டும் அவரை ஒரு முறைப் பார்த்தாள்.

''என்ன பாக்கறே.... போய் படுத்துக்கோ....''

ஒரு வாரம் ஓடி விட்டது.

அன்று ராகவன் வீடு திரும்பும் போது கை நிறைய பரிசுகளுடன் வந்தார். ராஜியை அழைத்தார்.

''இந்தா ராஜி.... நிறைய பூ வாங்கி வந்திருக்கிறேன். எல்லோரும் வைத்துக் கொள்ளுங்கள். பாலு... இங்கே ஓடி வா... இதில் நிறைய பழம், சாக்கலேட் வைத்திருக்கிறேன். எடுத்துக்கோ.....'' என்றவர் ''சுந்தருக்கும் பிடித்த முந்திரி பருப்பு, பிஸ்கெட்டும், மற்றவர்களுக்குப் பிடித்த பால் கோவாவும் இருக்கிறது....'' என்றார்.

எல்லோருடனும் வழக்கம் போல் சிரித்து, தமாஷாகப் பேசினார். கலகலப்புடன் சிரித்து, ரசித்து சாப்பிட்டார். நிம்மதியாக பேப்பர் படித்தார். டி.வி. பார்த்தார். பாலுவுக்கு பிடித்த காமிக்ஸ் கதை சொன்னார்.

இரவு அனைவரும் உறங்கப் போன பின் ராஜியை அழைத்தார்.

''ராஜி... நான் இன்று ரிடையர்டு ஆகி விட்டேன்....'' அவள் முகத்தை உற்றுப் பார்த்தார்.

'ரிடையர்டுமெண்ட் என்றால் இவளுக்கு என்னவென்று தெரியுமா.... இல்லை தெரியாது.....'



"ராஜி... நாளை காலை குளித்து விட்டு ஒரு சின்ன பெட்டியில் இரண்டு புடைவைகளை எடுத்துக் கொள்... எனக்கு வேண்டியவற்றை நான் எடுத்துக் கொள்கிறேன்...."

"எங்கே போக...."

"சும்மாதான்...."

"அதற்கு இல்லை நாளைக்கு...."

"சொன்னதை செய்....." என்று கண்டிப்புடன் கூறிவிட்டு விளக்கை அணைத்தார்.

மறுநாள் காலை இருவரும் காப்பி சாப்பிட்டு விட்டு சின்ன பெட்டியுடன் கிளம்பியதும் வீட்டினர் அதிர்ந்தனர்.

"எங்கேப்பா திடீரென்று....."

"நேத்திக்கு என்னவோ தோணித்து.... அம்மாவுடன் சில இடங்களுக்குப் போய் வருகிறேன்....."

"தாத்தா.... நானும் வருகிறேன்...."

"அவசியம்... ஆனால் இப்போ வேண்டாம்... உங்களுக்கு எல்லாம் லீவு விடட்டும்....."

ராகவனும் ராஜியும் கிளம்பினர்.

ஒரு வாரத்திற்குப் பின் மாலை, குடும்பத்தினர் அனைவரும் அந்த கடிதத்தை பிரமிப்புடன் படித்துக் கொண்டிருந்தனர்.

"அன்புள்ள சுந்தர், ரவி, மூர்த்திக்கு என் அன்பார்ந்த ஆசிகள். என் ரிடையர்மெண்ட் எனக்குப் பல விஷயங்களை, இதுவரை புரியாதிருந்த புதிரை அனாயாசமாக விளக்கி விட்டது. அதனால் நானும் அம்மாவும் தனியாக சென்று விட்டோம். உங்களை நிர்க்கதியாக விட்டு விட்டுப் போகவில்லை. நீங்கள் குடியிருக்கும் வீடு சொந்த வீடு. அதனால் வாடகை உங்களுக்கு மிச்சம். மேலும் என் பிராவிடண்ட் பண்ட், கிராஜுடி அனைத்தையும் நான்கு பங்காக்கி, உங்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு பங்கு வைத்து விட்டு, ஒரு பங்கு எங்களுக்கென திட்டமிட்டிருக்கிறேன். உங்களுக்கு எப்போது எங்களை வந்து பார்க்க வேணும் என்று தோன்றினாலும் கீழே என் முகவரிக்கு வரலாம். எல்லோருக்கும் எங்கள் ஆசிகள்.. அன்புடன் அம்மா......"

அந்த சின்ன அவுட் ஹவுசில் அமர்ந்து ராகவன் கேட்டார்.

"வீடு பிடித்திருக்கிறதா ராஜி...."

"உம்..." என்று முனகிய ராஜி, "இதெல்லாம் என்ன ஏற்பாடு... பாவம் குழந்தைகள்... உலகமே தெரியாது... அவா ஏதாவது தப்பு செய்திருந்தாலும் நீங்க சொல்லித் தர வேண்டாமா....."

"உனக்குத்தான் உலகமே தெரியவில்லை ராஜி......" என்றார் நிதானமாக.

"மேலும் சொல்லிக் கொடுத்து ஒரு விஷயம் தெரிவதற்கு இது ராமாயண காலமுமில்லை, பாரதக் காலமுமில்லை.... ஏனென்றால் இந்த அவசர யுகத்தில், அவரவர் சாப்பாட்டுக்கு பறக்கும் சமயம் தன்னலம் மனத்தை அழுத்தமா மூடியிருக்கு. அவரவராகத்தான் எல்லாம் தெரிஞ்சுக்கணும்.... உன் பிள்ளைகளும் மற்றவர்களும் தெரிஞ்சுப்பா.... எப்போ தெரியுமா.... பிள்ளைகள் ஓய்வு பெறும் சமயம்....."

"நீங்க தப்பு செஞ்சுட்டீங்களோ...!"

"இல்லை ராஜி..." என்றார் அழுத்தமாக.

"நான் நல்லது செஞ்சிருக்கேன். போகப் போக உனக்குப் புரியும்... நம் மீது பாசமும் மதிப்பும் மங்காமல் இருக்க செய்திருக்கிறேன்... ராஜி, இன்னும் நீ யதார்த்த உலகத்திற்கு வர வேண்டும். முயற்சி செய்து வந்து விட்டால், உனக்கும் நான் செய்த நன்மை புரியும்... அவரவர்க்கு சுதந்திரமாக வாழ்க்கை அமைத்துக் கொடுத்து விட்டு, விலக வேண்டிய சமயத்தில் விலகியிருக்கிறேன்.... இனி தேவையான சமயத்தில், தேவைப்படும் அறிவுரை கூறி அன்பு செய்வோம்....."

"பக்கத்தில் கோவில் கூட இல்லாம..."

"அளவுக்கு மிஞ்சினா அமுதமும விஷம்... நீ இத்தனை வருஷம் கோவில்ல, கடமையை தொழுதுண்டு இருந்தே... அது போதும்... இனிமே எனக்குத் துணையா ஒவ்வொரு விஷயத்திலும் இரு... ஏன்னா எனக்குத் துணை தேவைப்படறது..."

ராஜி முகத்தை மறைத்த அந்த பேப்பரை, மெல்ல எடுத்தாள். அவரை உற்றுப் பார்த்தாள். அந்த மனத்தின் தவிப்பு அவர் கண்களில் தெரிய, அவள் ஆதரவுடன் அவரை நோக்கினாள். அவள் உள்ளத்தை விட யதார்த்த உலகம் வித்யாசமானது என்று மெல்ல புரிந்தது.

வாழைக்காய், உருளைக்கிழங்கு, மரவள்ளிக்கிழங்கு, சர்க்கரை வள்ளிக் கிழங்கு இவற்றை வேக வைத்து, தோல் உரித்து (மரவள்ளிக்கிழங்கை மட்டும் தோல் உரித்தபின் வேக வைக்கவும்.) சிப்ஸுக்கு நறுக்குவது போல் வட்டமாக நறுக்கி நாலைந்து நாட்கள் வெயிலில் காய வைத்து, எடுக்கவும். வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு, கடுகு, உ.பருப்பு, மி. வற்றல், பெருங்காயம் இவற்றை வறுத்து, காய வைத்த கிழங்கை ஒடித்து, அத்துடன் உப்பையும் சேர்த்து மிக்ஸியில் நைஸாகத் திரித்து வைத்துக் கொண்டால், தேவை ஏற்படும்போது நெய் சாதத்துடன் பிசைந்து சாப்பிடச் சுவையாக இருக்கும்.

— உமா.

# அடாடா! இவருக்குத் தேவை 'ஹைக்ளோ' ஸ்டெய்ன் ரிமூவர்!

கறைகள் பலவிதம். மஞ்சள், டீ, காபி, பழம், உணவு, வெற்றிலை பாக்கு, லிப்ஸ்டிக், க்ரீஸ், எண்ணெய், பால்பாயிண்ட் பேனா மை, ரத்தக்கறை — இப்படி எதுவாயினும் நீங்கள் கவலைப்படத் தேவையில்லை.

புதிய 'ஹைக்ளோ' ஸ்டெய்ன் ரிமூவர் வீட்டில் ஏற்படும் சாதாரணக் கறைகள் அனைத்தையும் சுலபமாகவும், ஜாக்கிரதையாகவும், முற்றிலுமாகவும் களைந்து அகற்றுகிறது.

கறைபட்ட இடத்தில் 'ஹைக்ளோ' ஸ்டெய்ன் ரிமூவர் தடவுங்கள். மெதுவாகத் தேயுங்கள். கறைபட்ட துணியை வெதுவெதுப்பான டிடர்ஜெண்ட் சோப்புத் தண்ணீரில் நனையுங்கள். வழக்கம் போலத் துவைத்து, அலசி, காயப் போடுங்கள்.

கறை மறைந்தே போகிறது — இருந்த இடம் தெரியாமல்!

கைத்தறி மற்றும் வெளிநாட்டின் சாயம் தோய்த்த ஆடையானால், சாயம் போகும் துணியா என்றறிய, ஆடையின் உட்புற மூலையில் சிறிதளவு தடவித் தேய்த்துப் பாருங்கள். சாயம் கரைந்து போக வில்லையானால் 'ஹைக்ளோ'வைப் பயமின்றிப் பயன்படுத்துங்கள்.

'ஹைக்ளோ' ஸ்டெய்ன் ரிமூ தரைகள், சுவர்கள், உலோகங்கள், இதர பரப்புகள் — ஏன், சருமத்திலிருந்தும் — கறைகளை விரைவில் நீக்குகிறது.

எப்போதும் ஒரு ட்யூப் கைவசம் வைத்திருங்கள்.

---

வர்த்தக விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன.

---

புதிய




அளிப்பவர்கள்: ஹைக்ளோ தரை/சுவர் க்ளீனிங் பவுடர் மற்றும் 'ஹைக்ளோ' ஏர் ஃப்ரெஷ்னர்/ஸானிடைஸர்/ஜெல்லக்ஸ் க்ளீனர் ஆகியவற்றைத் தயாரிப்பவர்கள்.

**க்ளீன்ஸால் ஹைஜீன் ப்ராடக்ட்ஸ் பி. லிமிடெட்**
த.பெ. எண் 2732, சென்னை 600 002.
க்ரே-ஸால்வென்ட் கம்பெனி, லீட்ஸ், யு.கே. நிறுவனக் கூட்டுத் தயாரிப்பு.
போன்: 473649 டெலக்ஸ்: 41-7650 ECSE IN

மொத்த விற்பனையாளர்கள்:

அயர்ன்டைட் இந்தியா, சென்னை-600 002 போன்: 831846/832571 ● அக்சன்ஸ் இந்தியா, சென்னை-600 013 போன்: 553497 ● ரங்கஸாமி டிரேடர்ஸ், சென்னை-600 078 போன்: 422383 ● சென்னை டெக்ஸ்டைல் கெமிக்கல்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-600 028 போன்: 74589 ● ஈரோடு-638 001 போன்: 76835/77803 ● மகேஷ் எண்டர்பிரைஸஸ், செகந்திராபாத் போன்: 331041/332025 ● யுனிவர்ஸல் டிரேடிங் கார்ப்பொரேஷன், மங்களூர்-575 002 போன்: 27092 ● ஜாஸ்ஸ் அட்வர்டைஸிங் ஏஜென்ஸி, பிடார்-585 401 ● பிரிட்ஜ், கோழிக்கோடு-673 032 போன்: 64391 ● விஜயசந்திகா, கொச்சி-682 016 போன்: 367735/362176 ● சிக்கிம் ஸார்தா & கம்பெனி, சிக்கிம்-737 101 போன்: 2048 ● ஸிலேண்ட் எஞ்ஜினியர்ஸ் பிரைவேட் லிமிடெட், பம்பாய்-400 009 போன்: 862803/861379 ● ஸாகர் எண்டர்பிரைஸஸ், புனா-411 030 ● நரிந்திரா ஏஜென்ஸீஸ், சண்டிகர் போன்: 28329 ● கேஞ்சன் இண்டஸ்டிரீஸ் எண்டர்பிரைஸஸ், பாட்னா-800 014 ● பிரியா ஏஜென்ஸீஸ், கோயமுத்தூர்-641 011 போன்: 42386 (PP) ● சந்திரா குரு ஜோதி மார்க்கெட்டிங் ஏஜென்ஸீஸ், மதுரை-9 ● திரிசூல் கார்ப்பொரேஷன், சென்னை, போன்: 666264



Promoted by members of the TVS family

It's a safe deposit

# THE FIDELITY GROUP

பிடலிடி குரூப், டிவிஎஸ் குடும்பத்தினரால் துவக்கப்பட்டது. வாடகைக் கொள்முதல் மற்றும் குத்தகைமுறைப் பணஉதவி, நிர்வாகம் மற்றும் பொறியியல் போன்ற துறைகளில் ஆலோசனைகளை வழங்குகிறது. மேலும், பிடலிடி குரூப், தொழிற்துறைக்கான டயர்கள், ரப்பர் பொருட்கள், தனித்திறனுடன் தயாரிக்கப்படும் இரசாயனங்கள் - இவைகளைத் தயாரிப்பதுடன் மருத்துவப் பொருட்கள் மற்றும் பேக்கேஜிங் தொழிலிலும் ஈடுபட்டுள்ளது.

பல்வேறு துறைகளில் ஈடுபட்டுள்ள இந்த குரூப்பைச் சேர்ந்த நிறுவனங்கள் — பிடலிடி பைனான்ஸ் மற்றும் பிடலிடி லீசிங்.

இந்நிறுவனங்கள் இலாபகரமான மற்றும் முழுமையான நிதித்திட்டத்துடன் இயங்கி வருகின்றன. கொடுத்த கடன் தொகைகளைத் திரும்ப வசூலிப்பதில் மிகச் சிறந்த வசூல் சதவிகிதத்தைப் பெற்றுள்ளது. இதற்கு மேலும், ஒவ்வொரு வாடிக்கையாளருக்கும் டெபாசிட்தாரர்களுக்கும் தனிப்பட்ட, துரிதமான சேவையை அளிக்கிறது.

இந்த குரூப்பில் உங்களது முதலீடு முதன்மையான திறனுடன் திகழ்வதற்கு மூலகாரணங்கள் இவையே ஆகும்.

**பிடலிடி குரூப்பின் வளர்ச்சி - ஒரு கண்ணோட்டம்**

(ரூ. மில்லியன்களில்)




எங்கள் வளமையில் பங்கு கொள்ள தொடர்பு கொள்ளுங்கள்.



## பிடலிடி குரூப் கம்பெனிகள்

42, ஒயிட்ஸ் ரோடு, சென்னை 600 014. தொலைபேசி: 868986

---

**வளமான பணிக்கு நலமான வாழ்த்துக்கள்!**

**அளிப்போர்:**



**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்**

(ரீட்ரெடிங் மற்றும் கோச் டிவிஷன்கள்)

# அர்த்தமே வேறுதான்!

"இன்னிக்கு சாயங்காலம் எங்க அக்கா வீட்டுக்குப் போகலாமா?"

"சரி."

"உங்களுக்கு இஷ்டமில்லாவிட்டால் வேண்டாம்."

"உனக்குப் போக வேண்டுமா, வேண்டாமா என்பதைத் தீர்மானம் செய்து கொண்டு அப்புறம் என்னிடம் கேள்."

"நான் இப்பொழுது என்ன சொல்லி விட்டேன், என்று இப்படிச் சள்ளென்று விழறீங்க?"

"நானா சள்ளென்று விழுகிறேன், நீதான் என்னைப் பைத்தியமாக அடிக்கிறாய்."

இது ஒரு கணவன் மனைவியிடையே நடந்த சம்பாஷணை. இருவருக்கும் மனக் கசப்புடன் முடிந்தது. அப்படி என்ன பெரிய விஷயம் பற்றிப் பேசி விட்டார்கள். ஏன் ஒருவரை மற்றவர் புரிந்து கொள்ள முடிய வில்லை.

மனைவி 'அக்கா வீட்டுக்குப் போகலாமா?' என்று கேட்டபொழுது, போக வேண்டும் என்று எந்தத் தீர்மானமும் செய்யவில்லை. கணவருக்கும் சம்மதம் என்றால் போகலாம் என்றுதான் எண்ணினாள்.

அவன் 'சரி' என்று ஒற்றை வார்த்தையில் சொன்ன பதிலில் அவ்வளவாகச் சம்மதம் தொனிக்கவில்லை.

அவன் 'அவளுக்குப் போக வேண்டுமானால், போய்விட்டு வந்தால் போச்சு' என்று, தனக்கு அக்கறை இல்லாவிட்டாலும் அவளுக்காகச் சம்மதித்தான்.

இருவரும் ஒருவருக்கு ஒருவர் விட்டுக் கொடுத்தாலும், இருவரும் அதிருப்தியே அடைந்தனர்.

ஏன்?

ஒருவர் சொல்வதை மற்றவர் புரிந்து கொள்ள முடியாதது எந்த உறவிலும் உண்டு.

சிலருடன்தான் பார்த்த மாத்திரத்தில் வெகு நாட்கள் பழகியது போல் பேச முடியும். சம்பாஷணை, தங்கு தடையின்றி, ஒருவர் விட்ட இடத்திலிருந்து மற்றொருவர் தொடருவது போல் செல்லும்.

மற்ற சிலருடன் பேசும் பொழுது நீங்கள் எது சொன்னாலும் மற்றவர் தப்பாக எடுத்துக் கொள்வார், அல்லது அவர் சொல்வது எதற்காக என்று உங்களுக்குப் புரியாது. எதைப் பற்றிப் பேசுவது என்று தெரியாமல் ஒரு தயக்கம் வரும்.

எல்லாவிதமான உறவும், இந்த இரண்டு துருவங்களுக்கு நடுவில்தான் இருக்கிறது.

வெளி உறவுகளில் நாம் ஒருவருக்கு ஒருவர் புரிந்து கொள்ள முடியாவிட்டால் அவ்வளவாகப் பொருட்படுத்துவதில்லை. ஆனால் கணவன் மனைவி உறவில் அப்படி விட முடியுமா?

இந்தப் புரிந்து கொள்ள முடியாத நிலை கணவன் — மனைவிடையே அதிகமாகவே இருக்கிறது.

இதற்குக் காரணம் ஒருவர் ஆண், மற்றவர் பெண் என்பதும் ஒன்று!

ஆண் பெண் சம்பாஷணையில் ஒரு கலாசாரத்தின் வித்தியாசம் இருக்கிறது. அவர்களுடைய பழக்க வழக்கங்கள், எண்ணங்கள், அவர்களிடையே ஒரு அகழியாக இருக்கிறது.

ஐந்து முதல் பதினைந்து வயது வரை ஆணும் பெண்ணும் அவர்களின் சினேகிதர்களுடன் பழகியே பேசக் கற்றுக் கொள்கிறார்கள். இந்த வயதில் அவர்கள் தத்தம் இனத்துடனேயே அதிகம் உறவாடுகிறார்கள்.

சிறு பெண்கள் ஒன்றிரண்டு சினேகிதிகளுடன் நெருக்கமாகப் பழகி, ஆப்த சினேகிதிகளுடன், அந்தரங்கங்களைப் பகிர்ந்து கொண்டு உறவை வளர்த்துக் கொள்கிறார்கள். அவர்களுக்குக் கூடிப் பேசிப் பழகுவது சுலபமாக வருகிறது. ஒத்துப் போகவில்லை என்றால் விலகி விடுவார்கள். இந்த நெருக்கமான உறவில் புதியவர்கள் சேர்ந்து கொள்வது கஷ்டம். ஆனால், சேர்த்துக்கொள்ளப்பட்டால், அவர்களும் சமமாக மதிக்கப்படுவார்கள்.

சிறு பிள்ளைகள் பெரிய கும்பலுடன், வெளியில் விளையாடுவதில்தான் அதிக நேரம் செலவிடுகிறார்கள். இவர்கள், பேசுவது குறைவு. இந்த கும்பலில் யார் வேண்டுமானாலும் சேர்ந்து கொள்ளலாம். ஆனால் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு, அவர்கள் உழைக்க வேண்டும். தன் தகுதியை நிரூபிக்க வேண்டும்.

இருபாலரும் வளர்ந்து பெரியவர்களான பின்பும் அதே பழக்கமும், மனப்பான்மையும் உள்ளவர்களாகவே இருக்கிறார்கள்.

பெண்ணுக்குத் தன் கணவன், ஒரு புதிய, மேம்பட்ட, தனிப்பட்ட சினேகிதன்.

தன் குழந்தைப் பருவ கஷ்டங்களைத் தன்னுடன் பகிர்ந்து கொள்ளும் கணவன்,

ஒரு பெண்ணுக்கு நெருங்கிய சினேகிதனாகிறான்.

மனம் விட்டுப் பேசுவது என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் வெவ்வேறான விஷயம்.

பெண்ணுக்கு, தன் வாழ்க்கையில் நேருவதைப் பேசிப் பகிர்ந்து கொள்ளக் கூடிய கணவன் கிடைத்தால், அவளின் திருமண வாழ்வு திருப்தியானதாகத் தோன்றுகிறது.

பேசியே பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ள முடியும் என்று நினைப்பவர்கள் பெண்கள்.

பேசித்தான் தீர்த்துக் கொள்ள வேண்டுமானால் உறவில் ஏதோ கோளாறு என்று நினைப்பவர்கள் ஆண்கள்.

அதை விட்டு அவன், அவள் பிரச்னையைப் புரிந்து கொள்ளாமல், அவளின் அணுகுமுறையே தவறு என்று சுட்டிக் காட்டி, புதுவழி ஒன்று உபதேசம் செய்து, வருங்காலத்தில் இப்படிப்பட்ட இக்கட்டில் மாட்டிக் கொள்ளாதே என்று எச்சரித்து......

இந்தச் செய்கை ஆணைப் பொறுத்த வரை இயற்கையானது. நேர்மறையானது. ஆனால் பெண்ணுக்கு இது எதிர்மறையானதாகத்தான் தோன்றும்.

தன் அணுகுமுறையில் கணவன் பிழை காணுவதில், தன் பிரச்னையைத் தானே சமாளிக்கக் கையாலாகாதவளாக தன்னை எடை போடுவதாக நினைக்கிறாள். அவன்,



அவள் பேசுவது உறவைப் பலப்படுத்துவதாக எண்ணுகிறாள். அவன் அது பலவீனப்படுத்துவதாக எண்ணுகிறான். ஒருவர் செய்யும் காரியம் மற்றவர்க்குப் பெரும் தவறாகத் தோன்றுகிறது.

அப்படியே பேச ஆரம்பித்தாலும், அது எப்படிப் போக வேண்டும் என்று நினைப்பதிலும் ஆண் பெண் இடையே வித்தியாசம் இருக்கிறது. உதாரணமாக —

சுமதி, கணவருடன் சுமுகமாக இருக்கும் பொழுது, தன் ஆபீஸில் தனக்கு உள்ள ஒரு பிரச்னையைப் பற்றிச் சொல்கிறாள்.

அவள் எதிர்பார்ப்பது — அவன் அந்தப் பிரச்னையைப் புரிந்து கொண்டு, அவளின் உணர்ச்சிகள் இயற்கையானது என்று ஆமோதித்து, தனக்குத் தன் ஆபீஸில் நேர்ந்ததையும் சொல்லி, அவளின் தன்னம்பிக்கையை வளர்க்க வேண்டும் என்பது.

தன் பிரச்னையைச் சொல்லாததால், தான் ஏதோ அப்படி எதிலும் மாட்டிக் கொள்ளாத பிறவி என்று மறைமுகமாகத் தெரிவிப்பதாக எண்ணுகிறாள்.

அவள் நெருக்கத்தை ஏற்படுத்தும் என்று எண்ணிய நிகழ்ச்சி, அவர்களிடையே இடைவெளியை வளர்த்தது. நெருக்கத்தை உணர வேண்டும் என்று, தன்னைப் பாதிக்கும் விஷயத்தை அதிகம் சொல்லச் சொல்ல, அன்னியோன்னியத்தை வளர்ப்பதாக எண்ணி அவன் அவளுக்கு உபதேசம், புத்திமதி சொல்லச் சொல்ல, எதிர்மறையான பலனே கிடைத்தது.

தன்னுடைய புத்திமதி வேண்டாம் என்றால் அவள் ஏன் அவனிடம் தன் பிரச்னையைச் சொல்கிறாள் என்றே கணவனுக்குப் புரிவதில்லை.

நீண்ட உறவுக்குப் பின் —

ஒரு பாத்திரத்தில் வறுத்தும்
மற்றொன்றில் பொரித்தும்
மூன்றாவதில் வதக்கியும்
நான்காவதில் வேக வைத்தும்
அவதிப்படும் ஒவ்வொரு
குடும்பத்தலைவிக்கும்,

*மூன்று வார்த்தைகள் கொண்ட
ஓர் அறிவுரை...

# பிரெஸ்டீஜ்
## பிரஷர் பேன்

இதனை உபயோகித்து எத்தனை
விரைவாக என்னவெல்லாம்
செய்கிறது என்பதை உணருங்கள்













Prestige
PRESSURE PAN ©

TTK தயாரிப்பு

சாதாரண, அல்லது உயர்ந்த மூடியும் கிடைக்கும்.
உங்களிடம் முன்பே பிரெஸ்டீஜ் பிரஷர்
குக்கர் இருந்தால் மூடியின்றி பிரஷர் பேன்
மட்டும் வாங்கினால் போதும்

இத்தனை நாட்கள் பழகியபின், நான் சொல்லாமலே, எனக்கு என்ன வேண்டும் என்று உங்களுக்குத் தெரிய வேண்டாமா?' — மனைவி.

இத்தனை நாட்கள் பழக்கத்திற்குப் பின், 'நமக்கு என்ன வேண்டும் என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ள முடிய வேண்டாமா?' — கணவன்.,

சொல்லாமலேயே புரிந்து கொள்வது பெண் அகராதியில், அன்பைப் பிரதிபலிக்கிறது, அக்கறையைக் காட்டுகிறது.

இன்று பகல் பொழுதில் நான் என்ன செய்தேன் என்று கேட்கவில்லையே?' — மனைவி.

'ஏதாவது விசேஷமாக இருந்தால் சொல்லேன், நான் விசாரிக்க வேண்டிய அவசியம் என்ன?' — கணவன்.

''என்ன செய்தாய்?'' என்ற விசாரிப்பு அக்கறையைக் காட்டுகிறது பெண்ணுக்கு.

இந்த மாதிரியான அபிப்பிராய பேதங்களைச் சரி செய்வது கஷ்டம். ஏனென்றால் இரு தரப்பினருக்கும் தன் பக்க நியாயம் நிதர்சனமாகத் தெரியும் என்பது. மட்டுமல்ல, அடுத்தவரின் விளக்கம் புரியாததாகவே இருக்கிறது.

எல்லா மனைவிக்கும் தன் கணவனிடம் உள்ள ஒரு பெரிய குறை, நான் சொல்வதை அவர் காது கொடுத்துக் கேட்பதேயில்லை.

இதில் கொஞ்சம் உண்மை இருக்கலாம். ஆனாலும் பல சமயங்களில் அவர்கள் கேட்கத்தான் செய்கிறார்கள். மனைவிக்கு அதில் நம்பிக்கை இல்லாததற்குக் காரணம் என்ன?

ஒருவர் சொல்வதை நாம் கவனமாகக் கேட்கிறோம் என்பதை வெளிப்படுத்துவதில் கூட ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசம் இருக்கிறது.

பெண்கள் செயற்கையாலும் (புருவத்தை உயர்த்துவது, வாயைத் திறப்பது) சில சப்தங்களாலும் (ஹூம் ஹூம், ச்சோ ச்சோ, அப்படியா) நான் கவனமாகக் கேட்கிறேன் என்பதைத் தெரிவிக்கிறாள்.

ஆண்கள் இப்படி எதுவும் செய்வதில்லை அதனால் அவன் கேட்பதேயில்லை என்று நம்புகிறாள்.

ஆண்கள் ஏதேனும் சப்தம் எழுப்பினால் சொல்வதை ஒப்புக் கொள்கிறேன் என்பதற்காகத்தான் இருக்கும். அதனால் அவன் சொல்வதை ஒப்புக்கொள்ளவில்லையானால், சப்தம் செய்ய மாட்டார்கள். ஆண் பேசும்பொழுது, பெண் எழுப்பும் சப்தத்தை, அவள் அவனைப் பேசத் துரிதப்படுத்துவதாக பொறுமையில்லாத்தனமாகவும் கொள்கிறான்.

பெண்ணுக்குச் சின்னச் சின்ன விஷயமும் முக்கியம் வாய்ந்தது.

அதனாலேயே, கணவன் சொன்ன ஒவ்வொரு வார்த்தையையும் நினைவு கூர்ந்து ''அன்று ஏன் அப்படிச் சொன்னீர்கள்?'' என்று விளக்கம் கேட்கிறாள்.

அவனுக்கு அது நினைவே இருக்காது. 'வேண்டுமென்றே ஞாபகம் இல்லாதது போல் நடிக்கிறான்!' என்று மனைவி நினைக்கிறாள்.

'அவள், இல்லாததையெல்லாம் நான் சொன்னதாகக் கற்பனை செய்து கொள்கிறாள்' — என்று கணவன் நினைக்கிறான்.

பெண்கள் தோழிகளுடன் பேசிப் பழக்கப்பட்டவர்கள். ஆணுக்கு இதில் பயிற்சி கிடையாது. அதனால் கணவன் — மனைவி ஒரே விஷயத்தைப் பற்றிப் பேசினாலும், அந்தச் செய்கை இருவரையும் வெவ்வேறு விதத்தில் பாதிக்கிறது.

நாம் எல்லோரும் நம் வாழ்க்கைத் துணைவர், காதலராக மட்டுமல்ல, சிறந்த சினேகிதராகவும் இருக்க வேண்டும், என்றுதான் எதிர்பார்க்கிறோம். ஆணுக்கும், பெண்ணுக்கும் காதலில் கருத்து ஒருமித்திருக்கலாம், சினேகிதத்தில் வித்தியாசப்படுகிறது.

இந்த அடிப்படை வித்தியாசத்தைப் புரிந்து கொண்டு அதற்குத் தகுந்தாற் போல புரிந்து கொண்டு போனால் அன்றாடச் சச்சரவுகளைத் தவிர்க்கலாம்.

— ஜெயா வி. ராமன்

படம் : அழ. காசி. விசுவநாதன்



பால் வாழைக்காய் குழம்பு

**தேவையான பொருட்கள்:** தேங்காய்ப் பால், வாழைக்காய், வெங்காய வடகம், மிளகு, தனியா, சீரகம், ந. எண்ணெய்.

**செய்முறை:** (வற்றல் குழம்பு தாளிக்கும்) வெங்காய வடகம், மிளகு, சீரகம், தனியா இவற்றை வறுத்து விழுதாக அரைத்துத் தேங்காய்ப் பாலில் கரைத்து அதில் வாழைக்காயை நறுக்கிப் போட்டு வேக வைத்து வெந்ததும் இறக்கவும். நல்லெண்ணெயில் கடுகு, பெருங்காயம் தாளிக்கவும். மாறுதலான மணமுடன் இருக்கும். இந்தக் குழம்பு கர்ப்பிணிப் பெண்களுக்கு நல்ல ருசியாகவும் இருக்கும். வாந்தி நிற்கும். (தே. பாலுக்குத் தகுந்தாற்போல் சாமான்கள் எடுத்துக் கொள்ள வேண்டும்.)

— பாலா



• மைசூர் அரண்மனை

# நவராத்திரி சுபராத்திரி

**வ**ருஷம் முழுதுக்குமாக உள்ள பன்னிரண்டு மாதங்களில் ஒன்பது நாட்கள் அல்ல, அல்ல. ஒன்பது இரவுகள் — பெற்றிடும் சிறப்புக்கு, இந்தியாவுக்கு அப்பாலுள்ள வேறெந்த நாட்டிலும் ஈடுஇணை காண முடியாது.

செயல் திறனுக்கு அதிதெய்வமான சக்தியையும், செல்வத்துக்குப் பிறப்பிடமான செங்கமலச் செல்வி லட்சுமியையும், கல்விக்கு நிலைக்களமான சகலகலாவல்லியாம் சரஸ்வதியையும் மும்மூன்று நாட்கள் பயபக்தியுடன் பூசித்திடும் இந்த "ஒன்பது நாட்கள்" — நவராத்திரி பண்டிகையின் உட்கருத்து உலகம் முழுதும் ஒப்பக் கூடியதொரு ஒப்பற்ற கருத்தாகும்.

ஆற்றலையும் செல்வத்தையும் தவிர அறிவையும் போற்றி, வளர்க்க வேண்டும் என்ற பொன்னான கருத்தைவிட வேறென்ன



• கல்வியும்......

சிறப்பு வேண்டும்? பத்தாவது நாளான "விஜயதசமி"யன்று வீரத்துக்கு விழா எடுத்து விடுவதன் மூலம், ஒரு பரிபூரணமான கொள்கையின் சாராம்சத்தைப் பாரத நாடு பிரதிபலித்து விடுகிறது என்றால், அது மிகையாகாது.

வாழக்கூடிய வகையில் வாழ்வாங்கு வாழாத மனிதன் வெறும் "பொம்மை"யாகவே ஆகிவிடுவது போன்றுதான், இன்று நவராத்திரிப் பண்டிகையும் தனது ஆதித் தோற்றத்துக்கான உட்கருத்தை — ஒளி நிறைந்த கொள்கையை — மறைத்துக் கொண்டு, "பொம்மைக் கொலு" விழாவாக ஆகிவிட்டது!

ஆயினும், பெண்களுக்கே உரிய ஒன்பது நாட்கள் திருவிழாவாக — கலைஞர்களின் கற்பனைத் திறத்தையும் காட்டும் கலைவிழாவாக — இப்பண்டிகை உருப் பெற்றிருக்கிறது, என்ற வகையில் இன்றும் நாம் பெருமைப் பட்டுக் கொள்ளவே முடியும்.

நவராத்திரியை — சுபராத்திரியாக்கும் புனிதப் பணியில் கோயில்கள் அனைத்தும் ஈடுபட்டு, அம்மனுக்கும் தாயாருக்கும் அற்புதமான அலங்காரங்களுடன் பூஜை நடத்திடும் திறத்தாலும் இந்த நவராத்திரிப் பண்டிகை இன்று உயர் சிறப்புப் பெற்றிருக்கிறது.



வீரமும்!

## இனி என்று காணப் போகிறோம்?

இதற்கெல்லாம் மேலாக, நவராத்திரிப் பண்டிகைக்கு (விஜயதசமி உட்பட "தசரா"வுக்கு) "ராஜ்யத் திருவிழா" என்ற ஏற்றம் கொடுத்து இதுகாலம் வரையில் உயர்தனிப் பெருமையைக் கொடுத்து வந்த ஒரேயொரு மாநிலமும் உண்டு. அதுதான், மைசூர் மாநிலம்.



செல்வமும்......

உலகப் புகழ்பெற்ற மைசூர் அரசரின் அரண்மனையில், சம்பிரதாய ரீதியில், கஜ பூஜை, அசுவ பூஜை, கட்க பூஜை, நவக்கிரக பூஜை, கங்கண தாரணம், ராஜதர்பார், ஜம்பூ சவாரி, வன்னி பூஜை, கலை — வீர நிகழ்ச்சிகள் போன்ற உள்ளக் கிளர்ச்சியூட்டும் எத்தனையோ நிகழ்ச்சிகளுடன் சம்பிரமமாக அரசர் தாமே பயபக்தியுடன் நடத்திய அந்த விழாக் கோலத்துக்கு ஈடு அதுவே தான்!

பத்து நாட்கள் தகஜத்தகாயமாக மின்னொளி வீசி மினிர்ந்த 'மகாராஜா'வின் அரண்மனைக் காட்சியைக் காண்பதில் இணையில்லாத ஆனந்தம் அடைந்த லட்சோப லட்சம் கண்கள், அரசர் நிகழ்த்திய பூஜைகளையும், தர்பாரையும், பொன்னும் வைரமும் கொண்டு அமைந்த சிம்மாசனத்தில் அமர்ந்து அவர் கலைஞர்களையும் வீரர்களையும் விருது அளித்துப் பெருமைப்படுத்திய சிறப்பையும் கண்ட விழிகள், யானை மீது அம்பாரியில் அமர்ந்து ஒளி உமிழும் சாலைகளினூடே ராஜப்பிரதானிகளுடன் அரசர் நிகழ்த்திய "விஜயதசமி" ஊர்வலத்தைக் கண்ட நேத்திரங்கள் தற்கால "தசரா"

# இதைப்போல் எங்கும் இல்லை

## ஸ்பென்ஸர்ஸ் சூப்பர் மார்க்கெட்

769, அண்ணா சாலை, சென்னை-600 002
போன்: 863611 & 867272

நகரத்திலேயே ஒரே இடத்தில் எல்லாம் வாங்க சிறப்பான விற்பனை மையம்

| | |
|---|---|
| பீங்கான்/பிளாஸ்டிக் சாமான்கள் | படுக்கை விரிப்புகள்/டவல்கள் |
| அலங்கார விளக்குகள் | அலங்கார சாதனங்கள் |
| தோல் பொருட்கள்/காலணிகள் | பொம்மைகள்/ஃபேன்ஸி பொருட்கள் |
| ஆடைகள்/ஜவுளிகள் | விளையாட்டு பொருட்கள் |
| போட்டோ சாதனங்கள் | கைவினைப் பொருட்கள் |
| சமையல் சாதனங்கள் | பணியாரங்கள்/கேக்குகள் |

ஐஸ்கிரீம்கள் | மாமிச வகைகள் | செடி வகைகள்

வாட்டர் ஹீட்டர் | டெலிவிஷன்கள் | பர்னிச்சர்

குளுகுளு சாதனங்கள் | ஸ்டேஷனரி | புத்தகங்கள்

வெள்ளி/தங்க நகைகள்

குளுகுளு பெட்டிகள்



இலவச கார் பார்க்கிங் வசதி உண்டு.

FAME/S/1425 TAM A

வில் துவண்டு போகும்.

**தேவியைப் "புக்ககம்" அனுப்புகிறார்கள்:**

"சக்தி, சக்தி, சக்தி, சக்தி என்றோது" என்று மகாகவி பாரதி கூறினாரல்லவா? அந்தப் பாரம்பரியத்தைச் சேர்ந்த வங்காளிகள் நவராத்திரி ஒன்பது நாட்களையும் சக்திக்கே உரிய — துர்க்கைக்கே உரிமையான — "துர்க்கா பூஜை"யாகக் கொண்டாடுகின்றனர். "எதுவும் சக்தியில் அடக்கம்" என்ற அலாதியானதொரு சித்தாந்தத்தின் அடிப்படையில் வங்காளம் நவராத்திரிக்குத் தனி "மவுசு" ஏற்படுத்தியிருக்கிறது.

தங்களுடைய முழுசக்தியையும், பயன்படுத்தி வங்காள மக்கள் ஒன்பது நாட்கள் "துர்க்கை பூஜை" செய்வது போல் இந்தியாவில் வேறு எங்குமே காண முடியாது. ஆனால், அத்தனை "சக்தி"யையும் கடைசி நாளன்று அவர்கள் ஆற்று நீரில் கொண்டு போய் அமிழ்த்திடும் போது, நாம் சற்றுக் கலங்கவே செய்வோம். இமாலயத்தில் பரமசிவனுடன் வசிக்கும் துர்க்கை, சில நாட்கள் பிறந்தகத்தில் தங்கிப் போவதற்கு வருகிறாளாம்! அந்தச் சில நாட்கள்தான் நவராத்திரி நாட்கள்.

துர்க்கை — பார்வதி — பிறந்த பூமியாகத் தங்கள் மாநிலத்தைக் கருதும் வங்காளிகள், அவள் வரவையும், தங்களுடன் தங்கியிருத்தலையும் பக்தியுடனும் மகிழ்ச்சியுடனும் கோலாகலமாகக் கொண்டாடுகின்றனர். களிமண்ணாலும் தக்கைகளாலும் செய்த துர்க்கை உருவங்களுக்கு எத்தனையோ உபசாரங்கள் எல்லாம் செய்யும் அவர்கள், கடைசி நாளன்று, அவளை ஆற்றில் அமிழ்த்தித் திரும்பவும் புக்ககத்துக்கு "அனுப்பி" வைக்கிறார்கள். இந்த மாதிரியான நடைமுறை ஒரிஸ்ஸா போன்ற இன்னும் சில மாநிலங்களிலும் கடைப்பிடிக்கப்படுகிறது.

**பதினாறு நாட்கள் நவராத்திரி:**

"நவராத்திரி" என்பது ஒன்பது நாட்கள்தானே கொண்டாடப்படுகிறது? ஒரிஸ்ஸா மாநிலம் இதற்கு விதிவிலக்கு. அங்கே பதினாறு நாட்கள் "நவராத்திரி" விழா! இதை "ஷோடஸ பூஜை" என்று அந்த மாநிலத்தவர்கள் குறிப்பிடுகிறார்கள். ஆயுத பூஜை நாளன்று, பூரியிலுள்ள ஜகந்நாதர் கோயிலில் — ஜகந்நாதரின் சங்கு — சக்கரங்களுக்கும் விசேஷ பூஜை நடைபெறுகிறது! ஒரு நாள் அல்ல — இரண்டு நாட்கள் அல்ல — நான்கு நாட்கள் சங்கு சக்கரங்களுக்குச் சம்பிரதாய ரீதியில் பூஜை நடைபெறுகின்றது.

பழங்காலத்தில் "கலிங்கம்" என்று பெயர் பெற்றிருந்த ஒரிஸ்ஸா மாநிலத்தில் ராணுவ "ஜரூர்" நிலைஏற்பாடுகள் நவராத்திரி காலத்தில்தான் செய்யப்பட்டு வந்ததாம்! அமாவாசையையடுத்த ஐந்தாவது நாளை "அசுவ பஞ்சமி" என்று அவர்கள் கூறுகிறார்கள். அந்த நாள் குதிரைகளுக்குச் சிறப்பான நாளாகக் கருதுகிறார்கள். அன்று குதிரைகளுக்குத் திருமஞ்சனமாட்டி, நெற்றியில் பொட்டிட்டுப் 'பூ' சுற்றி, புரோகிதர்கள் பூஜை செய்தார்களாம் பண்டைக்காலத்தில். அதே போன்று, அதற்கு அடுத்த நாளான "கஜ சஷ்டி"யன்று யானைகளை ஆற்று நீரில் நீராட்டிப் பூஜித்தனர். இன்றும் மக்களிடையே இவ்வழக்கம் நடந்தேறி வருவது வெளிப்படையாகும்.

இவ்வாறு நவராத்திரி, இந்திய நாட்டின் வரலாற்றில் தனிச் சிறப்புமிக்க முத்திரையைப் பதித்திருக்கிறது. காஞ்சி காமாக்ஷியும், மதுரை மீனாக்ஷியும், காசி விசாலாக்ஷியும், அஷ்டலக்ஷ்மிகளும் ஆழ்ந்த பயபக்தியுடன் பூஜிக்கப்படும் சுபராத்திரியான நவராத்திரி, தமிழ்ப் பெருமக்களுக்கு ஆடம்பரமில்லாத — அற்புத மகாசக்தி கொழுந்துவிட்டு ஒளி வீசும் அடக்கமான — ஆத்மீக விழாவாகத் திகழ்கிறது.

— சன்மிஷ்டை.

கறிகாய்கள் விலை அதிகமாக விற்கும்பொழுது தொட்டுக் கொள்ள ஒரு உசிலியைக் கூறினார் தெரிந்த ஒருவர்.



அது: பாசிப் பருப்பு + கடலைப் பருப்பு இரண்டையும் நனைத்து வைத்து ஊறிய பிறகு அரைத்து (உப்பு, மிளகாய், பெருங்காயம் சேர்த்து)க் கொண்டு இட்லித் தட்டில் வைத்து வேக வைத்து, வெந்த பிறகு வெளியிலெடுத்துச் சிறு துண்டுகளாக வெட்டி பிறகு வாணலியில் கடுகு தாளித்து இதை வில்லை மாறாது மெள்ளப் புரட்டி, பொன்னிறம் வந்ததும் இறக்கி விட வேண்டும். குழம்பு, ரசம் சாதத்துக்கு உகந்தது.

— ராஜம்.

வண்ணப்படம்: டிமிர் தத்தா

# காமோதா

கதை: சுபயோகம் ஷ்வேதா
படம்:

ஒரு விடுமுறை நாளின் இரவுப் பொழுது—




"அழகும் அருங்குணமும் அமைந்த பெண் ஒருத்தி தோன்ற வேண்டும் என்று பார்வதி தேவி கேட்க, கற்பக விருட்சம் அவ்விதமாகவே செய்தது."




ஆனால் ஹுண்டன் என்ற அசுரன் அசோக சுந்தரியைக் கண்டு மயங்கினான். அவளைத் தன்னுடைய வைடூர்ய நகரத்தின் ஓர் ஆசிரமத்தில் சிறை வைத்தான்.




அசோக சுந்தரி மனம் மாறுவாள் என எதிர்பார்த்து, அனேக ஆண்டுகள் அவளை விடுவிக்காமல் கடுமையாகத் துன்புறுத்தி வந்தான் ஹுண்டன்.




வசிஷ்ட ரிஷி மூலம் விவரம் அறிந்த நகுஷச் சக்கரவர்த்தி பெரும் படையைத் திரட்டிக் கொண்டு வந்து அசுர சேனைகளுடன் போரிட்டு ஹுண்டனை அழித்தான்!



பார்வதி தேவியின்
அருள் வாக்குப்படியே
நகுஷனுக்கும்
அசோக சுந்தரிக்கும்
இனிதாகத்
திருமணம்
நடைபெற்றது !



ஆனால், கதை அத்தோடு
முடியவில்லை. ஹுண்டனின்
மகன் விஹுண்டன்
என்னும் அசுரன்!
அவன் தகப்பனை
விடக் கொடியவன்!
நகுஷனையும்
அவனுக்குத்
துணையாக
இருக்கும்
தேவர்களையும்
கொன்று
அசோக சுந்தரியைச்
சிறையெடுப்பேன்
என்று மூர்க்கத்தன
மாக முழங்கினான்.




மகாவிஷ்ணுவுக்கு
விஷயம் தெரிந்தது.
மாயாவியான அவர்
அழகான ஒரு மாயப்
பெண்ணை உண்டாக்கி
விஹுண்டனிடம்
அனுப்பினார்.



ஆஹா! உன்னைப்போலப்
பேரழகியை ஈரேழு உலகங்களி
லும் நான் கண்டதில்லை.
உன்னையே நான் திருமணம்
செய்துகொள்ள விரும்புகிறேன்.
உனக்கு என்ன வேண்டும்? கேள்!




ஆர்வத்துடன் சென்று, அசுர
குருவான சுக்கிராச்சாரி
யாரைச் சந்தித்தான்
விஹுண்டன்...




காமோதா உன்னுடைய கண்களுக்குப் புலப்படுவதே கடினமாயிற்றே!
எப்படியும் அவளைச் சந்திக்கிறேன்!..


சிவபெருமானின் அருளை வேண்டிக் காமோதாவைச் சந்தித்து விடலாம் என்று கைலாயங்கிரிக்கு விரைந்தான் விஹுண்டன். வழியில் நாரதரைச் சந்தித்துப் பேச வேண்டி நேர்ந்தது.
விஹுண்டா! உன் நோக்கமே சரியாக இல்லையே! விஷ்ணு பத்தினியான காமோதாவைச் சந்திக்கச் சிவனை அணுகுவதால் என்ன பயன்?
வேறு என்ன செய்யலாம் நாரதரே!


நான் சொல்வதைக் கேள்! உன்னை நேரில் கண்டால் காமோதாவுக்குப் புன்னகை வராது. ஆகவே, நீ கங்கைக் கரையில் அமர்ந்து கொள்! காமோதாவின் புன்னகையில் உதிரும் விநோத மலர்கள் கங்கையில் தான் மிதந்து வரும். அம்மலரைச் சேகரித்துக் கொண்டால் உன் விருப்பம் வெகு எளிதாக நிறைவேறிவிடும்!
சரி, அப்படியே செய்கிறேன்!


உடனே அவசரமாக அங்கிருந்து விரைந்து காமோதா தேவியைச் சந்தித்தார் நாரதர்.
உங்களுக்கு விஷயம் தெரியுமா? பிருகு முனிவரின் சாபத்தினால், உங்கள் கணவரான மகா விஷ்ணு, பூமியில் பத்து அவதாரங்கள் எடுக்கத் தீர்மானித்துப் புறப்பட்டுவிட்டார். இனிமேல் அவரை வைகுண்டத்தில் காண முடியாது. நீங்களும் அவரும் நீண்ட காலம் பிரிந்திருக்க வேண்டியிருக்கும்!
ஆ!


அதிர்ச்சியிலும் துன்பத்திலும் காமோதாவிடமிருந்து கண்ணீர் பெருகிக் கங்கையில் விழுந்தது. கண்ணீர்த் துளிகள் மலர்களாகி மிதந்து வந்தன!

நதி நீரிலிருந்து கண்ணீர்ப் பூக்களைச் சேர்த்தெடுத்தான் விஷராண்டன். அக் கணமே - அங்கு ஒரு தவப் பெண்!
எதற்காக இந்தப் பூக்கள்?
என் இஷ்ட தெய்வமான சிவனைப் பூஜிக்கவும், என் விருப்பத்திற்குரிய பெண்ணுக்கு மாலை யாத்துச் சூடவும்தான்!



மூடனே! பாபத்தைச் செய்து கொண்டே பூஜை நடத்தி என்ன பலன்? ஏற்கனவே ஒரு பெண்ணைத் துன்புறுத்திப் பாபத்தைச் சுமந்து அழிந்தான் உன் தகப்பன். அந்த பெண்ணின் வாழ்வைப் பறிக்க எண்ணி உன் மரணத்துக்குப் பாதை வகுத்தாய் நீ! இப்போது ஒரு பெண்ணின் துயரத்தில் தோன்றிய பூக்களை எடுத்து உன் கதையை முடித்துக் கொள்ளப் போகிறாய்!



அரக்க மூளை அறிவை இழந்தது!
ஏய்! யாரடி நீ? ஏதோ கெட்ட எண்ணம் கொண்டு என் பூஜையைக் கெடுக்கவா பார்க்கிறாய்? இதோ! உன்னைத் தொலைத்து விடுகிறேன்!



தவப் பெண்ணாக வந்த பார்வதி தேவி தன் சுய உருவில் தோன்றினாள்.
ஆ!
ஹூம்!
தேவியின் மூச்சுக் காற்றுப் பட்டதுமே, தன் மூச்சை நிரந்தரமாக நிறுத்திக் கொண்டு செத்து விழுந்தான் விஷராண்டன்! காமோதாவின் கண்ணீர் பூக்கள் தம்முடைய நாக சக்தியை நிரூபித்து விட்டன!"



பாட்டி! அந்தக் காமோதா தேவி யார்?
முன்னொரு காலத்தில் தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தார்கள். அப்போது மகாலட்சுமிக்கு முன்னதாக வாருணி, சிரேஷ்டா காமோதா என்று மூன்று பேர் பாற்கடலிலிருந்து தோன்றினார்கள். அவர்களில் இந்தக் கதையில் வந்த காமோதா என்பவள்தான் ஸ்ரீ துளசி!
அப்படியா!



துளசிச் செடியை வீட்டில் வளர்த்து வந்தால் காமோதாவின் கருணை கிடைக்கும். 'காமோதா தேவியே! உன்னுடைய புன்னகையை அருளாக எமக்கு அளிக்க வேண்டும்' என்று துளசிச் செடியை வணங்கி வேண்டிக் கொண்டால், காமோதாவின் அருளால் குடும்பத்தில் சுபிட்சமும் சந்தோஷமும் பெருகும்!



# ஹாக்கின்ஸ்®




## பாதுகாப்புமிக்கது சுவையுணவு சமைத்திட மிக விரைவான வழி

## ஹாக்கின்ஸ் பிரஷர் குக்கர்கள்

1. விஸில் அடிப்பது உறுதி - விரைவாக சமைக்கிறது.
2. கசிவதில்லை - தொல்லையின்றி இயங்குகிறது.
3. பிரஷர் உள்ளபோது திறக்காது - மிக அதிக பாதுகாப்பு அளிக்கிறது.

உங்கள் நேரம் மற்றும் பணத்தை மீதப்படுத்த உத்தரவாதம்.

அங்கீகரிக்கப்பட்ட சேல்ஸ் & சர்வீஸ் செண்டர்கள் :

| | |
|---|---|
| சென்னை | : சபரி டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ், 17, ராமநாதன் தெரு, தி.நகர். போன் : 441838 ● S. சந்தோஷ நாடார் சன் (பர்ம்) 88, நைநியப்ப நாய்க்கன் தெரு, ஈவினிங் பஜார், போன் : 563050. |
| மதுரை | : S. செல்லையா நாடார் & சன்ஸ், 267, காமராஜர் சாலை, போன் : 31421 ● S.S. கந்தசாமி பாண்டியன் & சன்ஸ், 3, அம்மன் சன்னதி, போன் : 26597. |
| கோவை | : ஐடியல் கிப்ட் ஹவுஸ், மாருதி தியேட்டர் அருகில், R.S. புரம், போன் : 23776. |
| சேலம் | : லாவண்யா மெட்டல் மார்ட், வாசவி மஹால் பில்டிங், முதல் அக்ரஹாரம், போன் : 63726. |
| ஈரோடு | : யூனிவர்ஸல் ட்ரேடர்ஸ், 21, சிவஷண்முகம் வீதி, போன் : 77232. |
| திருச்சி | : மாணிக்க விநயகர் மெட்டல் மார்ட், 42-A, N.S.B ரோடு, போன் : 24663. |
| திண்டுக்கல் | : S.M.B. மாணிக்கம் நாடார், 162, 163, பெரிய கடைத் தெரு, போன் : 5506. |
| வேலூர் | : ஆனந்த் ஏஜன்சீஸ், 478, மெயின் பஜார், போன் : 20543. |
| பாண்டிச்சேரி | : கந்தன் & கம்பெனி, 22, ஜவஹர்லால் நேரு தெரு, போன் : 4108. |

Charmino



• புஷ்பா



• மைதிலி



• சந்திரா



• செலின்ராஜ்



# இம்மாத இல்லத்தரசி

**முதல் பரிசு**

**டிவைன் டிலைட்ஸ்**

சோயா பீன்ஸ் — 100 கிராம்.
கடலைப் பருப்பு — 100 கிராம்.
கோதுமை — 100 கிராம்.
கம்பு — 100 கிராம்.
ராகி — 100 கிராம்.
பாசிப் பயிறு — 100 கிராம்.
கொள்ளு — 100 கிராம்.
பச்சரிசி — 100 கிராம்.
உளுந்து — 100 கிராம்.
பொட்டுக் கடலை — 100 கிராம்.
ஏலக்காய் — 25 கிராம்.

தேவையான பொருட்கள்:

பொட்டுக்கடலை, அரிசி தவிர மற்ற தானி யங்களைத் தனித்தனியே வறுத்து சுத்தம் செய்து மிஷினில் கொடுத்து மாவாக் கிக் கொள்ள வேண்டும். இதுவே 'டிவைன் மாவு' இதனுடன் பல்வேறு வைட்டமின்க ளோடு கூடிய தானியங்களைச் சேர்த்து உணவுகளைத் தயாரித்து வளரும் குழந்தை களுக்குத் தரலாம். பல், எலும்பு, மூளை, உடல் வளர்ச்சிக்கு இது உதவுவதால், இது ஒரு முழு உணவு.

**டிவைன் அடை**

தேவையான பொருட்கள்:

டிவைன் மாவு — 3 கப்.
நறுக்கிய காய்கறிகள் — 2 கப். (காரட்,

பீன்ஸ், தக்காளி, முருங்கைக்கீரை, குடமிளகாய், முட்டைக்கோசு, தாமரைத் தண்டு, பட்டாணி).

1 கப் நறுக்கிய வெங்காயம்.

வறுத்த வேர்க்கடலை — 1 கப் (25 கிராம் முந்திரி, திராட்சை விரும்பியவர் மட்டும்) நறுக்கிய இஞ்சி, கொத்துமல்லித் தழை.

1 கப் எண்ணெய்.

வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு இஞ்சி வெங்காயம் இவற்றை வதக்கவும். காய்கறிகளைச் சேர்த்து வதக்கிய பின் வேர்க்கடலை, திராட்சை முந்திரி சேர்த்து இறக்கவும்.

தோசைக் கல்லை அடுப்பில் காய வைத்து, டிவைன் மாவை கெட்டியாகக் கரைத்து, உப்பு சேர்த்து, அடை வார்க்கவும் ஒரு பக்கம் வெந்தவுடன் திருப்பிப் போட்டு அதன் நடுவில் காய்க் கலவையை வைத்து இருபக்கமும் மடித்து விட்டுச் சுற்றி எண்ணெய் விட்டு தணலில் வேகவிட்டு எடுக்கவும். இதனை தக்காளி சாஸ், தேங்காய் சட்டினியுடன் சாப்பிட நல்ல சத்துணவு.

## டிவைன் இலை கேக்

டிவைன் மாவு — 2 கப்.
துருவிய தேங்காய் — ¼ மூடி.
வெல்லம் — ¼ கிலோ.
வறுத்துப் பொடித்த வேர்க்கடலை — 1 கப்.
வாழை இலைகள்.

செய்முறை:

தேங்காய்த் துருவலுடன் வேர்க்கடலை வெல்லம் கலந்து வைக்கவும். வாழை இலையை இரண்டாக வெட்டி "6 X 4" சைஸில் தயார் பண்ணி வைக்கவும்.

மாவில், உப்பு, சுடுநீர் சேர்த்துக் கெட்டியாகப் பிசையவும். கொஞ்சம் மாவைச் சிறு உருண்டையாக எண்ணெய் தடவிய வாழை இலையில் வைத்துத் தட்டி, அதன் மேல் வேர்க்கடலை, தேங்காய் பூரணத்தை வைத்து இலையை அப்படியே மூடவும். குக்கரில் வெயிட் போடாமல் வேக வைத்து எடுக்கவும்.

## டிவைன் கட்லெட்

டிவைன் மாவு — 1 கப்.
உருளைக்கிழங்கு — 3 (வேக வைத்தது).
வெங்காயம் — 1 கப் (பொடியாக நறுக்கியது).
இஞ்சி 1," பச்சை மிளகாய் — 2, கொத்துமல்லித் தழை, பொடியாக நறுக்கியது.
சோம்பு — 1 டீஸ்பூன்.
எண்ணெய் — 1 கப்.
பொறைத்தூள் — 1 கப்.
மிளகாய்த் தூள் — 1 டீஸ்பூன்.
மஞ்சள் தூள் — சிறிதளவு.
உப்பு.

செய்முறை:

டிவைன் மாவுடன் உருளைக்கிழங்கு, சோம்பு, மிளகாய்த் தூள், மஞ்சள் தூள் கலந்து பிசைந்து வைத்துக் கொள்ளவும். வாணலியில் 2 டீஸ்பூன் எண்ணெய் விட்டு வெ...காயம், பச்சை மிளகாய், இஞ்சி சேர்த்து வதக்கிய டிவைன் கலவையில் சேர்த்து கொத்துமல்லித் தழையும் சேர்த்து மாவை உருண்டையாகத் தட்டி பொறையில் புரட்டி எண்ணெயில் பொறித்து எடுக்கவும்.

இந்த மாவினால் பாயசம், புட்டு, தோசை, என உணவு வகைகளைச் செய்து குழந்தைகளை மகிழ்விக்கலாமே!

— செலின்ராஜ், சென்னை — 24.

## இரண்டாம் பரிசு

## ஜவ்வரிசி ஃப்ரூட் பன்

தேவையான பொருட்கள்:

ஜவ்வரிசி மாவு — ½ கிலோ.
மைதா மாவு — ¼ கிலோ.
பச்சை திராட்சை — ½ கிலோ.
(விதையில்லாதது)
வெள்ளைச்சர்க்கரை — 100 கிராம்.
சமையல் சோடா — ½ தேக்கரண்டி.
டால்டா — 1 மேசைக்கரண்டி.
திரவ ஈஸ்ட் — 1 மேசைக்கரண்டி.

தனியாவை லேசாக நெய்யில் வறுத்துப் பொடி பண்ணி வைத்து சாம்பார் பண்ணிக் கீழே இறக்கி வைத்து இந்தப் பொடியைத் தூவினால் ரொம்ப நல்ல ருசியாக இருக்கும்.

சாம்பார் அரைத்து விட்டு செய்யும் பொழுது பச்சை கொத்துமல்லியையும் சேர்த்து அரைத்து விட்டால் ரொம்ப நன்றாக இருப்பதோடு இலையும் வேஸ்ட் ஆகாது.

— லட்சுமி.

செய்முறை:

திராட்சைப் பழத்தில் 100 மில்லி நீர் விட்டு மிக்ஸியில் அரைத்து வடிகட்டியில் தோல் நீங்க வடிக்கட்டவும். மாவுகளைச் சலித்து ஒரு பாத்திரத்தில் கொட்டவும். இதில் திராட்சையை விட்டு அத்துடன் ஈஸ்ட், சமையல் சோடா சர்க்கரை ஆகிய வற்றையும் போட்டு நன்றாகப் பிசைந்து ஈரத்துணியில் இரண்டு மணி நேரம் வைக்கவும்..

ஓவனைத் தயார் செய்யுங்கள் 380 டிகிரி வெப்பத்திற்கு வந்ததும் பிசைந்து வைத்த மாவைக் கல்லில் நன்றாக அடித்துப் பிசையவும். மாவும் பழமும் ஒன்று சேர்ந்து

# நெஸ்டம் பேபி ஸிரியல்.
# ஆரம்பத்திற்கு பொருத்தமானது.
# வளர்ச்சிக்கு உன்னதமானது.

**நெஸ்டமும் பாலும்—முழுமையான போஷாக்கு உணவு.**

உங்கள் குழந்தைக்கு நான்கு மாதங்களாகும்பொழுது அவனுக்கு பாலுடன் திட உணவும் தேவை. அவனுடைய ஜீரணத்திற்கு உகந்த நெஸ்டம் கொடுங்கள்.

நெஸ்டத்தை கொதிக்க வைத்த வெதுவெதுப்பான பாலில் கலக்குங்கள். முழுமையான போஷாக்கு உணவு தயார். இது குழந்தை ஆரோக்கியமாக துறுதுறுவென்று வளர உதவுகிறது.

**நெஸ்டம் குழந்தை உணவு பலவித சுவைகளில்**

உங்கள் குழந்தை வளர வளர அவனுக்கு புதிய சுவைகளை அறிமுகப்படுத்துங்கள். உதாரணமாக, மசிய வைத்த காய்கறிகள், வேக வைத்த பழங்கள் மற்றும் பருப்பு வகைகள் முதலியன. இது அவன் விரைவில் பெரியவர்களுடன் உணவை பகிர்ந்துகொள்ள உதவும்.

## நெஸ்டம்®
## ரைஸ்

இரும்புச்சத்து மற்றும் வைட்டமின்கள் அடங்கியது. பாலுடன் கலக்கவும்.







**இலவசம்**
உங்கள் குழந்தை அதன் உணவில் பலவித சுவைகளை விரும்புவான். எனவே இலவச நெஸ்டம் உணவு வகை செய்முறை புத்தகத்திற்கு எழுதவும்:
நெஸ்டம்,
தபால் பெட்டி எண். 6016
புது தில்லி-110 008.



# நரசூஸ் அளிக்கும் விழாக்கால வெகுமதிகள்!







**வெகுமதிகள் :**

- 35 கிலோவிற்கு எவர்சில்வர் ஜக்.
- 10 கிலோவிற்கு எவர்சில்வர் டபரா செட்.
- 6 கிலோவிற்கு எவர்சில்வர் டம்ளர்.
- 1½ கிலோவிற்கு துணிப்பை.
- ½ கிலோவிற்கு எவர்சில்வர் ஸ்பூன்.




மொத்தமாகவோ, சில்லரையாகவோ வாங்கும் நரசூஸ் காபியுடன் கிடைக்கும் வெகுமதிக் கூப்பன்களைப் பெற்று, வெகுமதிகளைப் பெறுங்கள். 1.10.88 முதல் 7.11.88-ல் முடியும் விற்பனைக்கே வெகுமதிகள் உரியவை.

**அப்படியா! இதோ போறேன்! நரசூஸ் காபி வாங்க!**



ஜீவனுள்ள ஒரே காபி!

# நரசூஸ் காபி



**நரசூஸ் காபி கம்பெனி**
சேலம் 636 007
கிளைகள்: தமிழகம் மற்றும் பாண்டிச்சேரியிலும்.

ADWAVE/NCC/3621

பக்குவமாக வந்ததும் ரொட்டிடப்பாவைச் சுத்தம் செய்து டால்டாவைத் தடவுங்கள். மாவை ஆறுபாகங்களாகச் செய்து ஒரு பாகத்தை டப்பாவில் போட்டு கையால் பரப்பி விடுங்கள். மாவு டப்பாவில் பாதி அளவே இருக்க வேண்டும். பத்து நிமிடங்கள் கழித்து வெளியில் எடுங்கள். இந்த 'பன்' சின்னஞ்சிறு குழந்தைகளுக்குக் கூட கொடுக்க வல்ல சத்துள்ள உணவாகும். இதை வெறுமனேயும் பாலில் தோய்த்தும் கொடுக்கலாம்.

பி. சந்திரா
தூத்துக்குடி — 628 002

## மூன்றாம் பரிசு

### சன்னா பேடா

தேவையான பொருட்கள்:

பொரிகடலை மாவு வறுத்தது — 1 கப்.
பீட்ரூட், காரட் துருவல் — 1 கப்.
சர்க்கரை — முக்கால் கப்.
ஏலம், சுக்கு — சிறிது (பொடி செய்து).
நெய் (அ) டால்டா — அரை — முக்கால் கப்
வேர்க்கடலை, முந்திரி, பாதாம் பருப்பு — உடைத்தது சிறியது.

செய்முறை:

பீட்ரூட், காரட் துருவலை வாயகன்ற, அடிப்பாகம் கனமான பாத்திரத்தில் 1 (அ) 2 ஸ்பூன் நெய்விட்டு நன்கு வறுக்கவும். பிறகு பருப்பு வகைகளை அதே பாத்திரத்தில் சிறிது நெய்விட்டு வறுக்கவும். பிறகு காய்கறித் துருவல், பருப்பு வகைகளைத் தனியாக வைத்து விட்டு, அதே பாத்திரத்தில் சிறிது தண்ணீர் விட்டு (¼ கப்) சர்க்கரையைப் போடவும். கொதித்து சீனி கரைந்ததும் மாவைச் சிறிது சிறிதாகத் தூவி, பிறகு துருவலையும் தூவி, நெய் சிறிது சிறிதாக விடவும். நுரைத்து, பாத்திரத்தில் ஒட்டாது வரும் போது நெய் தடவிய தட்டில் ஊற்றி, உடைத்த பருப்பினைத் தூவி, ஆறியதும் வில்லைகளாக வெட்டவும். செய்வது மிக எளிது. 3 நாட்கள் வரை கெடாது.

— புஷ்பா ராஜ், புதுதில்லி — 5.

## ஆறுதல் பரிசு

### ஆப்பிள் டால்

தேவையான பொருட்கள்:

ஆப்பிள் — 1.
தேன் — 2 டீஸ்பூன்.

## பரிசுப் பொருட்கள்:



செய்முறை:

குக்கரில் சாதம் வெந்ததும் ஆப்பிளைச் சாதத்தின் நடுவில் முழுசாகப் புதைத்து வைத்து விட வேண்டும். குக்கரையும் மூடிவிட வேண்டும். அந்தச் சூட்டிலேயே ஆப்பிள் மிருதுவாகிவிடும். பிறகு வெளியே எடுத்துக் கிண்ணத்தில் போட்டுக் கரண்டியால் மசிக்க வேண்டும். தோல் நெருடினால் எடுத்து எறிந்து விடலாம். மசித்த ஆப்பிளில் 2 ஸ்பூன் தேனைவிட்டு நன்றாகக் கலந்து சிறு குழந்தைகளுக்கு ஊட்டி விடலாம். வளரும் குழந்தைகளுக்குச் சத்தான உணவு. நேரடியாக அடுப்பில் வைத்து ஆப்பிளை வேக வைக்காததினால் இதிலுள்ள வைட்டமின்கள் வீணாவதில்லை.

— மைதிலி, சென்னை — 83.

**ஆறுதல் பரிசு**

**குழந்தைகளுக்கான சத்துணவு கூழ்**

தேவையான பொருட்கள்:

கூழ்:

நேந்திரங்காய் — 6.
சீனி — 2 கப்.
ஏலக்காய் — 1 டீஸ்பூன்.
வாதுமை பருப்பு — 10.
கேழ்வரகு — 1 கப்.
பால் — தேவைக்கேற்ப.
தேன் — சிறிதளவு.
நெய் — சிறிதளவு.

செய்முறை:

நேந்திரங்காய், வாதுமை, கேழ்வரகு இவைகளை உலர்த்தி சர்க்கரையுடன் பொடித்து வைத்துக் கொள்ளவும். தினமும் தேவைப்படும் போது, அரை டம்ளர் பாலில் அரை டம்ளர் தண்ணீர் சேர்த்துக் கொதிக்க வைத்து அதில் இந்தப் பொடிகளில் ஒரு கரண்டி போட்டுக் கிளறவும். நன்றாக வெந்து வரும் போது ஒரு டீஸ்பூன், நெய் ஒரு டீஸ்பூன் தேன் விட்டு எடுத்து ஆறியதும் குழந்தைகளுக்குத் தினம் ஒரு தடவை கொடுக்கலாம்.

— ஜானகி குமார், இரணியல்.

# கவனம் தேவை!

பெண்கள் தங்களுக்கு உடல்நிலையில் சிறிது குறைபட்டால் (உதாரணமாக தலைவலி, வயிற்றுவலி என்றால்) தாங்களே மாத்திரைகளை உட்கொண்டுவிட்டு அசிரத்தையாக இருந்து விடுகிறார்கள்.

இன்னும் சிலர் வயிற்று வலி, உடல்வலி, கால்வலி என்றால் உடனே மருத்துவரை அணுகுவார்கள். அவர் எழுதிக் கொடுக்கும் மாத்திரைகளை முழுவதுமாகச் சாப்பிட மாட்டார்கள். ஏதோ ஒன்றிரண்டை மட்டும் சாப்பிட்டு விட்டு 'வலி தீர்ந்துவிட்டது. இனி எதற்கு மாத்திரை. வேஸ்ட்' என்று தீர்மானித்துக் கொண்டு விடுவார்கள். இது மிகவும் தவறு.

சமீபத்தில் ஒரு மருத்துவமனையில் இதைப் போன்ற ஒரு பெண்மணியைப் பார்த்த அனுபவம் இதை எழுதத் தூண்டுகிறது.

அப்பெண்மணிக்கு முப்பத்தைந்து வயது இருக்கலாம். இரண்டு வருடங்களாகத் தீராத வயிற்று வலி. முதலில் கஷாயத்தில் ஆரம்பித்து பின் மருந்துக் கடை மருத்துவம் தொடங்கி மருத்துவர்கள் பலரைப் பார்த்த பின் அந்த மருத்துவமனையில் அறுவை சிகிச்சைக்குச் சேர்க்கப்பட்டார்.

அப்பெண்மணியின் வயிற்றில் இந்த இரண்டு வருடங்களில் ஒரு சிறு கட்டி எப்படிப் பெரிதாக மாறி விட்டிருக்கிறது பாருங்கள். இக்கட்டியின் எடை 3½ கிலோ. கிட்டத்தட்ட உயிருக்குப் போராடிய நிலையில் சேர்க்கப்பட்டு அறுவைச் சிகிச்சை பெற்றார் இப்பெண்மணி.



ஆகவே, எந்த ஒரு உடல்நலக் குறைவையும் அலட்சியப்படுத்தாது, நல்ல நம்பிக்கையான மருத்துவரை அணுகி, குணப்படுத்திக் கொள்வதே அறிவுடைமை.

தகவல்: அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் லக்ஷ்மணன்

— லக்ஷ்மி நடராஜன்.



* ராஜமாதங்கி, வாராஹி, அஷ்ட லக்ஷ்மி, மகாமேரு, புடைசூழ......

# அன்னையே அகிலாண்ட நாயகி

* பஞ்சமுக விநாயகர்



மைசூரில் கோலோச்சி நிற்கும் 'சாமுண்டி' தசராவில், மைசூர் அரசர்களால் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டாள். அதே போல, அதற்கடுத்த சிறப்புடன் புதுக்கோட்டை அரசர்களால் நவராத்திரி கொண்டாடப்பட்டது. ஊரெல்லாம் திருவிழாக் கோலம் பூண, சுற்றியுள்ள கிராமங்களில் இருந்தெல்லாம் மக்கள் வெள்ளமென வந்தடைய நவராத்திரி நாயகி புதுக்கோட்டையை வலம் வந்திருக்கிறாள்.

இந்தியா சுதந்திரம் பெற்ற பின், அரசர்கள் மறைந்த பின் மைசூரைப் போலவே, புதுக்கோட்டையிலும் நவராத்திரி ஒளி குன்றியது. அதை ஈடு செய்யத்தானோ என்னவோ புவனேஸ்வரி புதுக்கோட்டையிலே, குடிகொண்டாள். முதன் முதலில் புவனேஸ்வரி அம்மன் ஆவாஹனம் ஆனதும் புதுக்கோட்டையில்தான்.

'ஸ்ரீ ஜட்ஜ் சுவாமிகள்' என அன்புடன் அழைக்கப்படும் ஸ்ரீமத் சதாசிவ ப்ரம்மேந்தர சரஸ்வதி அவதூத சுவாமிகள் உண்மை

—மஞ்சுளா ரமேஷ்

என நாளும் அங்கு அன்னையின் முன் அருளாசி பெற மக்கள் வந்த வண்ணம் இருக்கிறார்கள்.

ஒவ்வொரு நாளுமே அன்னைக்கு அங்கே அற்புதமான ஆராதனைதான். காலையில் ஸ்ரீபுவனேஸ்வரி ஸுப்ரபாதம் தொடங்கி, கணபதி பூஜை, மஹ்யச் ஜபம். அபிஷேகம், ஆராதனை, நவாவரண பூஜை, சப்தசதி பாராயணம், தீபாராதனை, பஜனை என அத்தனை உபசாரங்களும் அங்கு குறைவின்றி நடந்து வருகிறது.

கைகளில் பாச, அங்குசங்களுடன், அபய முத்திரை தந்து, இதழில் மந்தகாசப் புன்னகையுடன் அமர்ந்திருக்கும் புவனத்துக்கெல்லாம் ஈஸ்வரியான அந்த அகிலாண்ட நாயகியை நாளெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம்.



வேண்டுவார் வேண்டும் வரம் தரும் அன்னை அவள்.

சத்திய மூர்த்தி சாஸ்திரிகளும், சந்திர சேகரனும் நாளும் ஒரு அலங்காரம் செய்வித்து, தெய்வ சேவையில் தங்களை மறந்து ஈடுபட்டு இருக்கிறார்கள்.

அரசாங்க வேலையில் இருந்து ஓய்வு பெற்ற வெங்கடராமனை மேனேஜிங் டிரஸ்டியாக்கி அம்பாள் சேவைக்கு என அனுக்கிரஹித்தார் ஸ்ரீலஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள். மேனேஜர் கிருஷ்ண மூர்த்தியும் அதிஷ்டானத்தை நியமம் தவறாமல் பேணுவதில் கவனமாய் இருக்கிறார்.

பஞ்சமுக விநாயகரும், பஞ்சமுக ஆஞ்சநேயரும் நின்ற நிலையில் வருபவர்களுக்கு அருள் பாலித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நிலை கண்டு, ஞானக் கடலாக யாத்திரைகள் பல செய்து நார்த்தா மலையில் தியான சமாதியில் இருந்திருக்கிறார். அவருடைய சமாதி நிலை கலையாமல் பல்லக்கில் புதுக்கோட்டைக்கு சுமந்து வரச் செய்தார் அன்றைய புதுக்கோட்டை திவான்.

ஜட்ஜ் சுவாமிகளின் சீடரான சுயம்பிரகாச முனிவரின் சீடரே இன்று புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் வேதகால மகரிஷிகளைப் போல மகத்தான யாகங்களை யக்ஞங்களை இயற்றி வருபவரும், ஸ்ரீ புவனேஸ்வரியை ஜட்ஜ் சுவாமிகளின் அதிஷ்டான வளாகத்தில் ஆவாஹனம் செய்தவருமான ஸ்ரீலஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள்.

ஒளிகுன்றி இருந்த நவராத்திரி வைபவங்கள் புதுக்கோட்டையில் மீண்டும் படிப்படியாக பொலிவு பெற ஆரம்பித்து இருக்கிறது.

"அன்னை புவனேஸ்வரியை அகத்துள்
இருத்துவோர்க்கு.
அழகெலாம் சக்தியாகும் அன்பெலாம்
சக்தியாகும்
அறிவெலாம் சக்தியாகும் அனைத்துமே
சக்தியாகும்"

* பஞ்சமுக ஆஞ்சநேயர்.



நவராத்திரியில் சண்டிஹோமம் செய்வது போலவே வருடம் ஒரு தடவை மே, ஜூனில் மகாயாகங்களும் இங்கு ஸ்ரீலஸ்ரீ சாந்தானந்த சுவாமிகளின் தலைமையில் நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது. ஸ்ரீ அன்னபூர்ணா மஹாமந்த்ர லக்ஷயக்ஞம், ஸ்ரீ தட்சிண காளிகாதேவி மஹா லக்ஷத்ர யக்ஞம் போன்றவை அவற்றுள் சில.

யாக யக்ஞங்களின் சக்தியிலே அற்புதமாக மின்னிக் கொண்டிருக்கிறாள் ஸ்ரீ புவனேசுவரி. இவளுக்கு அங்கு மஞ்சள் காப்பு செய்விக்க பெண்களுக்கிடையே போட்டி.

இப்போதைய போஸ்ட் மாஸ்டரின் மனைவி அலமேலு மிகுந்த பக்தி சிரத்தையுடன் அன்னை தங்கமாக மினுங்க மஞ்சள் அரைத்துக் கொடுப்பதுடன், தம்பதிகளாக நின்று அம்பாளின் சந்நிதியிலே பாடவும் செய்கிறார்கள்.

மஞ்சள் காப்பு மஞ்சளை எப்படி அரைக்கிறார்கள்? நல்ல விரளி மஞ்சளை முதலில் மிகவும் சன்னமான மாவாக இடித்து அதை நன்கு சலித்து எடுத்துக் கொள்கிறார்கள். அதற்குப் பிறகு அதில் எலுமிச்சம் பழச் சாறைப் பிழிந்து அரைத்துத் தருகிறார்கள். சாதாரணமாக மஞ்சள் நீர்க் கலந்தவுடன் சிறிது நேரத்திற்கெல்லாம் கறுத்து விடும்

அதற்காக எலுமிச்சம் சாறு பிழிந்து அரைக்கிறார்கள். அதனால் முதல் நாள் மஞ்சள் காப்பு மறுநாள் வரை. அப்படியே நிறம் மாறாமல் இருப்பதுடன், இன்னும் கொஞ்சம் கூட ஒளிவீசுகிறதாம்.

அம்பாளின் சந்நிதியிலே ஒருபுறம் ராஜ மாதங்கி என்று சொல்லப்படும் மீனாட்சி அம்மை கொலுவிருக்கிறாள். மறுபுறம் வாராஹி எனும் வைஷ்ண தேவி அருள்புரிகிறாள். இப்படி இருபுறமும் இரு தேவியர் காவல் புரிய, அஷ்ட லட்சுமிகளும் வாயிற் படியிலே அமர்ந்து ஐஸ்வர்யங்களை அருள் பாலித்துக் கொண்டிருக்கிறார்கள்.

சந்நிதியின் முன் ஸ்ரீ மகாமேரு ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இதுவே சக்தியின் இருப்பிடமாக இருக்கிறது. விசேஷ பூஜைகளும், ஆராதனைகளும் மகாமேருவிற்குச் செய்யப்படுகிறது.

மகாமேரு ஒளிவீச, ராஜமாதங்கியும், வாராஹியும் துவாரபாலகர்களாக, அஷ்ட லக்ஷ்மிகள் புடைசூழ ஸ்ரீபுவனேஸ்வரி அருள் பாலிக்கிறாள்.

இவளைத் துதிப்போர்க்கு சித்திக்காதது ஏதுமில்லை என்பதே கருத்து. சகநயும, ஐஸ்வர்யமும், பயநாசனமும், இவ்வுலக இன்பங்களும், மேலுகப் பதவியும் குறைவறக் கிடைக்கும் என்பதையே இவை காண்பிக்கின்றன.

புகைப்படங்கள்: **யோகா.**





**"என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித்தர நான் முடிவு செய்தது ஏனென்றால்"**

அந்த நாட்கள் எனக்கு இன்றும் நினைவிருக்கு. அப்போது எனக்கு என் மகள் வயதிருக்கும். மாதத்தில் அந்த 5 நாட்களை எத்தனை கடினமாகக் கடந்தேன்...சங்கடம், தொல்லை, சிரமம். அதைவிட மோசம் என்னவென்றால் எங்கள் காலத்தில் வீட்டுத் தயாரிப்புகளையே உபயோகித்தோம். அது தர்ம சங்கடமாயிருக்கும். அதை துவைத்துக் காயப்போட்டு போதும் போதும் என்றாகிவிடும். ஆனால், இப்போது காலம் மாறிவிட்டது.

நான் வாழ்ந்த காலம் வேறு. அதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட காலத்தில் வாழ்கிறாள், என்மகள். இக்காலப் பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட மிகத் துடிப்போடு செயல்பட வேண்டியுள்ளது. எங்கள் காலத்தை விட இப்போது மாறிவரும் உலகிற்கேற்ப பன்மடங்கு சுறுசுறுப்புடன் இயங்க வேண்டியுள்ளது. ஆகவேதான் என் மகளுக்கு நான் கேர்ஃப்ரீ தேர்ந்தெடுத்தேன். காரணம், நான் இளம்பெண்ணாக இருந்த போது அனுபவப்பட்டதைப் போல், என் மகளும் சிரமப்படக் கூடாதல்லவா.

முக்கியமான அம்சம் என்னவென்றால், கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். நான் அந்தக் காலத்தில் செய்தது போல் என் மகள் துவைத்துக் காயப்போட்டு சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையான போது ஒவ்வொரு முறையும் புத்தம் புதிய சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம். ஒரு தாயாகிய எனக்கு எது முக்கியம் என்றால், கேர்ஃப்ரீ மிக மிக சுகாதாரமானது என்பதுதான்.

**உலர்வும் சுகமும்**

கேர்ஃப்ரீ, அடக்கமானதாகும். என் மகளுக்குத் தேவைப்படும் எல்லாப் பாதுகாப்பையும் தருகிறது. காரணம், அதிகமாக உறிஞ்சக் கூடிய அதன் அடுக்குகள், மாதவிலக்கினை உள்ளே நன்கு ஈர்த்துக் கொள்கின்றன.




அது, நாளெல்லாம் உலர்வோடும் சுகமாகவும் தன்னை வைத்துக் கொள்வதாக என் மகளே கூறுகிறாள்.

அதிகமாக மாதவிலக்கு வரும் நாட்களில் உபயோகிப்பதற்கு, கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ் உள்ளது. நீண்ட, அகன்ற, தடிப்பான நாப்கினான இது, அவளுக்கு கூடுதலான பாதுகாப்பும் பத்திரமும் அளிக்கிறது.

இப்போது, கேர்ஃப்ரீ டியோடரண்ட்டும் வந்துள்ளது. டியோடரண்ட், மாதவிலக்கின் வாடையைக் குறைத்து அவளுக்கு சுத்தமும் புத்துணர்ச்சியும் தருகிறது. ஆம்! அவளுக்கு மிகவும் தேவைப்படும் நேரத்திற்கான புத்துணர்ச்சி!

கேர்ஃப்ரீ உபயோகிக்கும் போது, அவள் வெளியில் சென்றுவரும் போது கூட பாதுகாப்பாகவும் பத்திரமாகவும் உணர்கிறாள்.

ஆகவே எங்கள் காலத்தில் கிடைக்காத ஒன்றை இப்போது



என்மகளுக்கு தர முடிவதை எண்ணி பூரிப்படைகிறேன். அதுதான் கேர்ஃப்ரீ வசதி. கேர்ஃப்ரீ பாதுகாப்பு.

மாறிவரும் காலத்தோடு நாமும் மாறவேண்டாமா:

**இன்றைய மாறிவரும் காலத்திற்கேற்ற கேர்ஃப்ரீ பாதுகாப்பு விண்டம்**

| | |
|---|---|
| ரெகுலர் | முழுமையான பாதுகாப்பு மற்றும் பத்திரம் |
| எக்ஸ்ட்ரா லார்ஜ் | அதிகமான மாதவிலக்கு மற்றும் இரவிலும் உபயோகத்திற் கான கூடுதல் பாதுகாப்பு. |
| டியோடரண்ட் | முழுமையான பாதுகாப்பு அத்துடன் வாடையற்ற புத்துணர்ச்சி. |

# கேர்ஃப்ரீ.® காரணம், காலம் மாறிவருவதற்கேற்ப அவளும் மாறுகிறாள்.

® கேர்ஃப்ரீ ஜான்ஸன் & ஜான்ஸன்—யுஎஸ்ஏயின் ட்ரேட்மார்க் ஆகும்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

OBM/2560/TAM




**இந்த இதழ் முதல் பிரபல மருத்துவர் டாக்டர். கமலா செல்வராஜ் (எம். டி. டி. ஜி. ஓ.) வாசகிகளின் கேள்விகளுக்கு விரிவான பதில் தருகிறார்:**



கமலா செல்வராஜ்.

எனக்கு வயது 36. எனது பற்கள் பொடிந்து வருகிறது. ஓரத்தில் சிறிது பொடிந்து அங்கு குழி ஏற்பட்டு இதற்காகப் பல்லைப் பிடுங்கும் நிலை வருகிறது. இது வரை 4 பற்கள் இதுபோல் ஆகிவிட்டன. பற்கள் இதுபோல் ஆகாமல் இருக்க என்ன செய்வது?

— சரஸ்வதி.

முப்பத்தாறு வயதில் பற்கள் பொடிந்து வருகிறது என்றால் உடம்பில் பல்லுக்குரிய சத்து இல்லை என்றுதானே அர்த்தம்? பல்லுக்கு நான்கு பாகங்கள் உண்டு. (படம்) அதாவது.

1. இனாமல் (Enamel) இதுதான் நம் பல்லில் வெள்ளையாகக் காணப்படும் கடினமான பகுதி.

2. பல்லின் பெரும்பகுதியான காழ்க்கூறு. (Dentine) இதன் மேல் தோல்தான் இனாமல். டென்டைன் நடுவில் உள்ள இடத்தில்தான் பல்ப் (Pulp) உள்ளது.

3. பல் காரை (Cement)

4. எலும்பை மூடியுள்ள ஜவ்வு. (Perio s teum). இதுதான் பல் பதிந்து இருக்கும்எலும்பு.

இனாமல் 96.5% எர்த்லி மெட்டர் (Earthly Matter) 3.5% அனிமல் மெட்டர். (Animal Matter) அலுமினிய எரியகி—(Phosphates) கரி வகைசுண்ணாம்பு (Carbonate & Calcium) Traces of Fluoride & Calcium. Phosphate of Magnesia & other salts.

மேற்கூறிய சத்துக்கள் எல்லாம் நாம் தினம் உட்கொள்ளும் ஆகாரத்தில் உள்ளன. பால், குறைந்தது மூன்று டம்ளர் தினமும் பருக வேண்டும். பிறகு இரண்டு வேளை பற்பசை கொண்டு பல் துலக்க வேண்டும். இரவும் பகலும் வாய் கொப்பளிக்க வேண்டும். உணவு உட்கொண்ட பிறகு ஒவ்வொரு முறையும் நன்றாக வாய் கொப்பளிக்க வேண்டும்.



எனக்கு வயது 31. எனக்குத் திடீரென்று நினைவு சக்தி குறைய ஆரம்பித்தது. ஏதாவது சிந்தனை செய்யும் போது திடீரென்று மூளையில் அடைப்பு ஏற்படுகிறது. இதை நன்றாகவே உணர முடிகிறது. ஒருமுறை எனக்கு ஒரு மனிதர் கொடுத்த மயில் ஏதோ இரும்புத் தூள் போன்ற கெட்டியான தூள் இருந்தது. அதைக் கவனிக்காமல் குடித்து விட்டேன். அதிலிருந்துதான் பிரச்னை அதிகமாக ஏற்பட்டது அதைக் கேட்டால் பிரச்னை ஆகும் என்பதால் அமைதியாக அந்த வீட்டை விட்டு வெளியேறி விட்டேன். எனக்கு ஊசி போட்டால் நெஞ்சில் அடைப்பு ஏற்படுகிறது. ஆகையால் என்ன மாத்திரை என்ன ஆகாரம் சாப்பிடுவது விளக்கமாக எழுதவும்.

— ஆர். சேகர்.

உங்கள் பிரச்னையின் பல்வேறு அறிகுறிகள் ஒன்றுக்கொன்று தொடர்பற்றவை என்றாலும் இளவயதில் தங்கள் மனநிலை பாதிக்கப்பட்டுள்ளது தெளிவாகின்றது. இது ஒரு **Delusion Disorder.** தாங்கள் கவலைப்படக் கூடிய அளவு உடல்நிலை பாதகம் ஒன்றுமில்லை. மனவியல் மருத்துவரின் **Psycho-analysis** மற்றும் அவர் கொடுக்கும் மருந்து அறிவுரையும் உங்களுக்குப் பெரிதும் பயன் அளிக்கும்.

எனக்குத் திருமணமாகி முப்பத்தேழு ஆண்டுகள் ஆகின்றன. குழந்தைகளும் நிறைய இருக்கின்றன. எனது வயது ஐம்பது வயது ஆகி விட்டது. எனக்கு நான்கு ஆண்டுகளுக்கு முன் கர்ப்பப் பையில் ஏதோ சதை வளர்ச்சி காரணத்தால் கர்ப்பப்பை அகற்றப்பட்டு விட்டது. கர்ப்பப்பை அகற்றப்படும் வரையில் வளர்ந்த குழந்தைகள் கல்யாணமாகியும், ஆகும் வயதில் இருந்தும் உடல் உறவு வேண்டும் போல் இருந்து அடிக்கடி என் கணவருடன் உடல் உறவு கொண்டேன். இந்த அறுவை சிகிச்சைக்குப் பிறகு எனக்கு உடலுறவு இச்சையே ஏற்படவில்லை. அத்துடன் வெறுப்பாகவும் இருக்கின்றது.

எனது கணவரோ ஐம்பத்தேழு ஆகியும் வாரத்தில் இரண்டு மூன்று முறையாவது உடலுறவு கொள்ள முயற்சிக்கின்றார். நான் இடம் கொடுக்கா விட்டால் அவருக்கு வீக்கமும் வலியும் ஏற்படுகின்றது. அடிவயிற்றில் நரம்புகள் புடைத்துக் கொண்டு வலி தாங்காமல் கஷ்டப்படுகின்றார்.

அவரை நினைத்தாலும் பரிதாபமாக இருக்கின்றது. இதற்கு ஒரு நல்ல யோசனை கூறவும்.

எஸ். ஆண்டாள்.

ஒரு பெண் பிறக்கும் போதே தியாகம் என்னும் பெருமையுடன் பிறக்கிறாள். கணவனின் இச்சைக்கு அடிபணிய வேண்டியது தான். ஆனால் அதற்கென ஒரு வயது, வரம்பு, சூழ்நிலை எனக் கிடையாதா?

கர்ப்பப்பையை நீக்கியபின், கருவகத்தை எடுத்திருப்பார்கள். தீட்டு நின்றபின் உடலில் பாலின ஹார்மோன்களின் அளவு குறைந்து விடுகிறது. அதாவது, இந்த மாதிரி சிற்றின்பத்தில் மனம் செல்லாது. மனம் வீட்டையும், குழந்தையையுமே சுற்றி வரும். இது எல்லோருக்கும் ஏற்படும் ஒன்று. இதனால் நீங்கள் மனச்சஞ்சலப்பட வேண்டாம். ஆண்களின் இச்சைக்கு வயது வரம்பு கிடையாது.

தங்கள் கணவர் உடல் மனநிலை பற்றிய அறிகுறிகள் **"Prostatitis"** எனும் நோயை குறிக்கும். சிறுநீர்ப்பையின் கீழ் நீர்ப்பாதையில் உள்ள இந்தச் சுரப்பியின் அழற்சியே மிகையான காமம், விந்தகங்களின் வீக்கம் மற்றும் நீர்ப்பாதை எரிச்சலுக்குக் காரணமாகும். இந்த அழற்சிக்குக் காரணமான நோய்க் கிருமிகளை சிறுநீர் சோதனை மூலம் தெரிந்து தகுந்த கிருமி நாசினி மருந்துகளை 'யூராலஜிஸ்ட்' ஒருவரின் அறிவார்ந்த ஆலோசனைக்குப் பின் உட்கொள்ளவும்.

உடல் உறவு கொள்ளும் போது எரிச்சல் ஏற்படுவது, பாலின ஹார்மோன் குறைந்த பின் உறுப்பில் வளம் குறைந்து, வறண்டு, நீர்ப்பசை இல்லாது போவதே காரணம். இதனை ஈடுசெய்ய **Dienestrol Cream** என்ற ஹார்மோன் அடங்கிய மருந்தினை உபயோகிக்கலாம்.

"என்னுடைய மனைவி என்னை விடப் புகழ் பெற்று விளங்குவதில் எனக்கு மகிழ்ச்சிதான்! என்னுடைய மனைவியைக் கவனித்துக் கொள்வதே இந் நாட்டுக்கு நான் ஆற்றக் கூடிய அரும் பணியாகும்" இப்படிச் சொன்னவர் யார் தெரியுமா? பாகிஸ்தானின் இரும்புப் பெண்ணான பெனாசிர் புட்டோவின் கணவர் அசிப் ஜர்தாரி.

சொசைட்டியிலிருந்து சீதா.









# கடுமையான வலிகளுக்குக் கட்டாயமாகத் தேவை ஸ்ட்ர்ர்ர்ராங் சிகிச்சை!

மண்டையைப் பிளக்கும் தலைவலி, மிகக் கடுமையான உடல் வலி, தீவிரமான தசைப்பிடிப்பு, தொடர்ந்து தொல்லை தரும் சுளுக்கு - இவற்றுக்கு அவசியம் தேவை அமிர்தாஞ்சன் ஸ்ட்ராங் பெயின் பாம்.

உங்களுக்கு மிகவும் பழக்கமான அமிர்தாஞ்சனில் அடங்கியுள்ள அதே மூலப் பொருட்களே அதிக தீவிர சக்தியுடன் அமிர்தாஞ்சன் ஸ்ட்ராங்கிலும் உள்ளன. கடுமையான வலிகளையும் வேதனையையும் விரைவில் போக்குவதற்காகவே ஸ்ட்ர்ர்ர்ராங்காகத் தயாரிக்கப்பட்டுள்ளது அமிர்தாஞ்சன் ஸ்ட்ராங்.

**அமிர்தாஞ்சன்**

**ஸ்ட்ர்ர்ராங்**

கடுமையான வலியையும் வேதனையையும் போக்கிட



அமிர்தாஞ்சன் லிமிடெட்



OBM 831 TM R











# ஒலிம்பிக் செய்திகள்











லிம்பிக் போட்டி முதன் முதலாக 16—ம் ஆண்டு ஏதென்ஸ் மாநிலத் த 'ஒலிம்பியா' என்னும் இடத்தில் நடத்தப்பட்டது. அதனால்தான் இவ்விளையாட்டுக்களை 'ஒலிம்பிக்' என்று பெயரிட்டனர்.

2. பழங்கால ஒலிம்பிக்கில் தேர் ஓட்டம் ஒரு முக்கிய போட்டியாக இருந்தது. இதில் பல அரச வம்சத்தினரும் கலந்து கொண்டனர்.









3. ஆரம்பத்தில் ஒலிம்பிக்கில் பெண்கள் விளையாடவோ பார்க்கவோ தடை விதிக்கப்பட்டிருந்தது.

4. 1928—ல் ஆம்ஸ்டர்டாம் நகரில் நடைபெற்ற ஒலிம்பிக் போட்டியில்தான் முதன் முதல் பெண்கள் ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்ள அனுமதிக்கப்பட்டனர்.

5. பண்டைய ஒலிம்பிக் போட்டியில் ஏமாற்றுபவர்களுக்குத் தண்டனை சாட்டையால் அடித்தல்.

6. ஒலிம்பிக் நீச்சல் போட்டியில் முதன் முதலாக ஆங்கிலக் கால்வாயைக் கடந்து வெற்றி பெற்ற பெண்மணி ஜெர்ட்ரூட்எடர். அமெரிக்காவைச் சேர்ந்தவர். வருடம் 1924.

7. ஒருமுறை பெண்களுக்கான ஜிம்னாஸ்டிக் போட்டியில் தரை உடற்பயிற்சியில் இரு நாடுகளைச் சேர்ந்த வீராங்கனைகள் முதலாவதாக வந்தனர். அங்கேரியைச் சேர்ந்த ஒகெலிட்டியும், ரஷ்யாவைச் சேர்ந்த எல்—லாட்டினினாவும் சேர்ந்து பதக்கத்தைப் பெற்றனர்.

8. 1908—ல் நடந்த குத்துச் சண்டைப் போட்டியில் எல்லாப் பதக்கங்களையும் பிரிட்டன் பெற்று சாதனை புரிந்துள்ளது.

9. இம்முறை சியோலில் நடக்கும் ஒலிம்பிக் போட்டிகளில் புதிதாக இரு போட்டிகள் அறிமுகப்படுத்துகிறார்கள். அதுதான் 'தெக்கோண்டே' 'பேஸ்பால்'

10. அடுத்த ஒலிம்பிக் ஸ்பெயின் நாட்டில் பெர்ஸலோனியா நகரில் 1992—ம் ஆண்டு நடக்கிறது.

11. ஒலிம்பிக் சுடர் முதன் முதலில் 1936—ம் ஆண்டு பெர்லின் விளையாட்டுப் போட்டியில் ஏற்றப்பட்டது.

1920—ம் ஆண்டு ஒலிம்பிக் கொடி தயாரிக்கப்பட்டது.

12. ஒலிம்பிக் போட்டி சியோலில் நடக்கும் போது துவக்க நாளன்று பெண்களுக்கான துப்பாக்கிச் சுடும் போட்டி முதலாவதாக நடக்கிறது. முதல் தங்கப் பதக்கம் இப்போட்டி மூலமாகத்தான் தரப் படுகிறது.



யெலீனா

13. சியோல் ஒலிம்பிக் போட்டி முடிவடைந்ததும் ஒலிம்பிக் ஜோதிக்காக ஒரு தனி பீடம் அமைக்கப்படும். அதில் ஜோதி வைத்துப் பாதுகாக்கப்படும்.

14. சியோல் ஒலிம்பிக் போட்டிகளில் மொத்தம் 1871 நடுவர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

15. சியோல் ஒலிம்பிக்கில் மொத்தம் 23 வகைப் பந்தயங்கள் நடக்கின்றன. 237 பதக்கங்கள் வழங்கப்படுகின்றன. 12 ஆயிரம் பேர் கலந்து கொண்டனர்.

16. 'உலக மக்களிடையே நல்லெண்ண நட்பை உருவாக்கும் ஒலிம்பிக் பந்தயம் வெற்றி பெற எனது வாழ்த்துக்கள்' என்று தென் கொரிய அரசுக்கு செய்தி அனுப்பியுள்ளார் போப் ஜான்பால்.

தொகுப்பு: விஜயா

படங்கள்; நன்றி: 'சோவியத் நாடு'.





# முன்பு




ASP-AS-351/88 TAM

# இப்போது




உண்மை. புதிய அமுல்ஸ்பிரே.
பழைய தோற்றத்தை
விடுத்து வியத்தகு தோற்றம்
கொண்டுள்ளது.

ஆனால், அதுமட்டுமே மாற்றம்.
உள்ளே, எப்போதும் போலவே
மிகச் சிறந்தது.
இனிப்பூட்டியது.

விட்டமின்களும்,
இரும்புச்சத்தும் செறிந்தது.
மேலும், ஜீரணிக்க எளிது.
ஏனெனில் சரியான அளவிலே
கொழுப்பு கலந்துள்ளது.

எனவே, நிச்சயமாக இந்த
மாற்றம் ஒரு அலங்காரத்-
திற்காகத்தான்.



விற்பனையிடுப்போர்: குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், ஆனந்த் 388 001. குஜராத்



# எங்க வீட்ல ஒத்துக்க மாட்டாங்க



• ஜம்பகா

"பெண்கள் நிகழ்ச்சிக்கெல்லாம் கால தாமதமாக வருகிறார்கள் என்றால் அதற்குக் காரணம் இந்த ஆண்கள் தான்!" என்று ஒரு போடு போட்டார் ஷெரின்.

ஒழிந்த நேரத்தில் சமூகசேவை என்றில்லாமல் காலை பத்து மணி முதல் ஐந்து மணி வரை தங்களுடைய காஜாமலை பெண்கள் சங்கத்திற்காக உழைக்கும் பெண்களின் கூட்டத்தைத் திருச்சியிலேதான் காண முடிந்தது.

தையல்யூனிட்டும், அம்புலன்ஸும் வைத்துக் கொண்டு கிராம சேவையும், முழுநேர ஆஸ்பத்திரியுமாக வளர்ந்திருக்கிறது. காஜாமலை பெண்கள் சங்கம் 'உலக எழுத்தறிவு தினம்' கொண்டாடியபோது சிறப்பு விருந்தினராக வந்திருந்த அரவாண்டி கூட்டத்திற்கு வந்த பெண்கள் தாமதமாக வந்தார்கள் என குறையாகச் சொன்னார்.

அதற்குத்தான் ஷெரீன் மேலே சொன்னது போல பதிலளித்தார்.

"பெண்களுக்கு இன்றைக்கு இரட்டைப் பொறுப்பு வந்திருக்கிறது. வீட்டையும் பார்த்து விட்டு, வெளியேயும் போக வேண்டியதாக இருக்கிறது. வெளியே போவதால், வீட்டில் சிறு குறை ஏற்பட்டால், "என்ன பெரிசா கிளம்பிட்டே' என்று ஏச ஆரம்பித்து விடுகிறார்கள். அதற்காக மேலும் உழைக்க வேண்டியதாகிறது. இத்தனையையும் பொறுத்துக் கொண்டு பெண்கள் இன்றைக்கு முன்னேறத்தான் செய்கிறார்கள்" என்றார்.

சரஸ்வதி, ஷமீம், மஞ்சுளா, சுபா, கரீமா முதலிய பெண்கள் இவரோடு தோளோடு தோள் நின்று பணிபுரிகிறார்கள்.



• சக்தி மாதர் சங்க உறுப்பினர்கள்

கணவன் வேறொரு பெண்ணை மணந்து கொண்டான் என்று செய்தி தெரிந்தவுடனேயே, வெள்ளை உடை உடுத்தி, தன் குழந்தைகளுடன் பொதுநலச் சேவையில் குதித்தவர்தான் வீரம்மாள்.

ஆதரவற்ற அனாதைக் குழந்தைகளுக்கு அன்னை மகளிர் நல சங்கம் ஆரம்பித்தார். வானொலி நிலையத்தில் பணியாற்றி வந்த பணத்தையெல்லாம் கொட்டி இன்று உயர் நிலைப் பள்ளி அளவிற்குக் கொண்டு வந்திருக்கிறார்.

பிரிண்டிங் பிரஸ் போன்றவற்றை வைத்து வேலை வாய்ப்பினையும் உருவாக்கித் தந்திருக்கிறார். சொந்த வாழ்க்கையின் தோல்வியால் மனம் ஒடிந்து விடாமல்,

அதையே ஒரு வாய்ப்பாகக் கருதி, பொது வாழ்வின் முன்னேறியுள்ள இவர் இப்படிப் பட்ட பெண்களுக்கெல்லாம் ஒரு முன்னோடி என்றுதான் சொல்ல வேண்டும்.

கள்ளம் கபடமில்லாத இந்தப் பெண் மணியைத் தேடி பதவிகளும், விருதுகளும் வருவதில் வியப்பில்லைதான்.

"குழந்தைங்க நமக்கு மரியாதை கொடுக் கணும்னு எதிர்பார்க்கிறோம். ஆனா அவங் களுடைய பாட்டிக்கு மரியாதை கொடுக்கக் கத்துத் தரதில்லை. நமக்கு வர்ற மருமகளும் இதையேதான் செய்வா. நாளைக்கு நம்ப பெண்ணும் குழந்தை பெற்று வளர்க்கும் போது இப்படித்தான் ஆகும். அப்புறம் இன்றைக்குத் தெருவுக்கு ஒரு ஸ்கூல் இருப் பது போல, முதியோர் இல்லங்களும் பெரு கத்தான் செய்யும்" என்றார் ஜம்பகா ராம கிருஷ்ணன்.

பல பெண்கள் சங்கங்களில் உறுப் பினராக இருக்கும் இவருடைய சிந்தனை கள் யோசிக்க வேண்டியவை.



* ஜெசீன்.

"கூட்டுக் குடும்பம் என்பது வீட்டில் இல்லாமல் போனது போலவே ஒரு அநியா யம் என வரும் போது சேர்ந்து குரல் கொடுக்க சமுதாயம் முன்வருவதில்லை. பெண்களெல்லாம் ஒற்றுமையுடன் கொடு மைகளுக்கு எதிர்ப்புக் குரல் கொடுக்கணும். ஏதாவது ஒரு ஊர்வலம் நடத்த வேண்டும் என்று சொன்னால்கூட, "ஐயையோ, நாங் கள்லாம் தெருவில நடக்க மாட்டோம்" என்கிறார்கள்."

என்றார்கள் அவருடன் இருந்த 'சக்தி சங்க' உறுப்பினர்கள்.

"நீங்கள்லாம் போங்க. உங்க வீட்ல இதுக்கெல்லாம் ஒத்துப்பாங்க. எங்க வீட்ல இதையெல்லாம் ஒத்துக்க மாட்டாங்க என்று ஏதோ நாங்களெல்லாம் தண்ணீ தெளித்து விடப்பட்டவர்களைப் போல பேசுவார்கள். கேட்கும் போது மனதுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். என்ன செய் வது?"

என்று இவர்கள் சிரிக்கிறார்கள்.

அடேங்கப்பா அந்த இளம் பெண்கள்



* தையல் வகுப்பு



* அன்னை மாதர்நல சங்கத்தில்...

* மாணவிகள்.



வியூகம் அமைத்துக் கொண்டு மங்கையர் மலரைப் பற்றி கேள்விக் கணைகள் தொடுத்தார்கள். பாருங்கள். சிறிது திக்குமுக்காடிப் போக வேண்டியதாகத்தான் ஆகி விட்டது. காவேரி பெண்கள் கல்லூரியின் இந்தத் துடிப்பு நிறைந்த மாணவிகளின் நடுவே அமைதியே உருவான கல்லூரி முதல்வர்.

'ஏன் இது போடுவதில்லை?'

'ஏன் அது மட்டும் மூடநம்பிக்கை இல்லையா?'

'பெண்கள் பெண்கள் நலம் என்றெல்லாம் சொல்பவர்கள் இப்படியெல்லாம் போடலாமா?'

என கைகளில் மங்கையர் மலரின் இதழ்களை வைத்துக் கொண்டு ஆராய்ந்து தள்ளி விட்டார்கள்.



இத்தனைக்கும் அங்கு எல்லோரும் மங்கையர் மலரின் ரசிகைகள், தாங்கள் விரும்பிப் படிக்கும் பத்திரிகை தாங்கள் நினைத்த படியெல்லாம் வர வேண்டும் என இளமைக்கே உரித்தான துடிப்புடன் ஆர்வம். அதிலே பலர் எம்ஃபில்லுக்கும், பி.எச்.டிக்கும் மங்கையர் மலரை ஆய்வுக்காக எடுத்துக் கொண்டு இருப்பவர்கள்.

இவ்வளவு ஆர்வமான வாசகிகளைக் கொண்டு இருப்பது பாக்கியமேஎன மகிழ்ந்த போது, உரையாடல்கள் முடிந்த போது, இவர்களுக்குப் பதிலாக வானம் பொத்துக் கொண்டு 'ஜோ'வென கொட்ட ஆரம்பித்து விட்டது.

— மஞ்சுளா ரமேஷ்.

புகைப்படங்கள்: யோகா

# இரண்டில் ஒன்றை தேர்ந்தெடுங்கள் இன்றே!



இதோ எங்கள் இரண்டு வித CAT 1000 மாடல்கள் இவை கம்ப்யூட்டர் எய்டெட் டெக்னலஜியின் அருமையான படைப்புகள். டிவியை ஸ்விட்ச்-ஆன் செய்ததும் அவற்றின் சிறப்புகளைக் கண்டுகளிக்கலாம். பிரகாசமான, துல்லியமான, உயிரோவியமான வண்ணங்கள் தோன்றும். இவை அனைத்தும் கம்ப்யூட்டர் எய்டெட் டிசைனிலும் (CAD), உலகத்தரம் வாய்ந்த தயாரிப்பாளர்களின் LOT, SMPS, MOSFET, எலெக்ட்ரானிக் ட்யூனர், கலர் ஐஸி-க்கள் போன்ற இம்மியளவும் குறைகளற்ற உறுப்புகள் கொண்ட கம்ப்யூட்டர் எய்டெட் மான்யுபேக்சரிலும் (CAM) மட்டுமே சாத்தியமாகி இருக்கின்றன.

## ◄CAT 1000 SE

**பளபளப்பாக பிரமிப்பூட்டும் பேரழகு கொண்ட கலர் டிவி**



## CAT 1000 DX ►

*(ரிமோட் மாடல்)*

**டிஜிட்டல் ஸிந்தஸைஸர் ட்யூனிங் மற்றும் 39 ப்ரோகிராம் மெமரி கொண்டது.**

CAT 1000 DX டிவியின் ரிமோட் ஹாண்ட் செட்டில் (தொலைக் கட்டுப்பாட்டில்) மைக்ரோப்ராஸஸர் கண்ட்ரோல் அமைக்கப்பட்டுள்ளது. இதனால் ப்ரோகிராம், பாண்டு மற்றும் சானல் செலக்ஷன், தவிர வால்யூம், கலர் கான்ட்ராஸ்ட், ப்ரைட்னஸ், மியூட், ஸ்டாண்ட்-பை போன்ற இயக்கங்களை மிக எளிதில் செய்ய முடிகிறது.

Solidaire 10



படங்களின் அன்பாதரவு: கீதாஞ்சலி அம்பர் மற்றும் சுஜாதா பிலிம்ஸ் லிமிடெட் ('அக்னி நட்சத்திரம்' படக்காட்சி)

**கலர் சாலிடேர்**

Insight-DE-758

# நவராத்திரி

# பூங்கா அலங்காரம்

**ந**வராத்திரி கொலுவின் முன்னால் பொம்மை பார்க் வைப்பது. யாவருக்கும் தெரிந்ததே. வீட்டில் தூக்கி எறியும் சாதாரண பொருட்களைக் கொண்டு இந்தப் பூங்காவை அழகாக அமைக்கலாம்.

தேவையான பொருட்கள்: வீட்டில் உபயோகப்படாத டானிக் பாட்டில்களுக்குத் தருகின்ற வண்ண வண்ண பிளாஸ்டிக் கப்புகள் ஆறு எடுத்துக் கொள்ளுங்கள். ஒரே வண்ணத்தில்ஜோடிகளாக இருந்தால் நல்லது.

பத்து செ. மீ. நீளமுள்ள பழைய தடிமனான எலக்டிரிக் ஒயர்கள். ஒயர்களின் உள்ளே பத்துப் பதினைந்து மெல்லிய தாமிரக் கம்பிகள் உள்ள ஒயர்கள் தேவை. இவை பச்சை வண்ண மேல் ரப்பர் உறையுடன் கூடிய ஒயர்களாக இருந்தால் சிறந்தது இல்லையென்றாலும் பரவாயில்லை.)

பச்சை நிற பொடி பாசிமணிகள் — 25 கிராம்,

சற்று பெரிய பாசிமணிகள் — பத்து.

ஒயர்களை முதல் 5 செ.மீ. வரை, வெளிப்புறரப்பர் உறைகளை விட்டுவிட்டு,மீதமுள்ள 5 செ. மீ. ஒயர்களை புது பிளேடால் வெளிரப்பரைச் சீவி உள்ளே உள்ள தாமிரக் கம்பிகளை அறுந்து விடாது முழுநீளத்துடன் வெளிப்படுத்துங்கள். இத்தாமிரக் கம்பிகளை — நன்கு தனித்தனியாகப் பிரித்துக் கொள்ளவும். பின் டானிக் கப்புகளில் நல்ல களிமண்ணை அடைத்து முதல் 2 செ. மீ. நீள ஒயர்களை இந்தக் களிமண்ணில் ஒட்டி விடவும். களிமண் காயவும் ஒயர்கள் இறுக்கமாகச் செடியின் தண்டுமேல் நிற்கும்.

பின் பச்சை நிறப் பொடி பாசிகளைப் பொறுமையாக ஒவ்வொரு தாமிரக் கம்பி, முழு நீளத்துக்கும் கோக்கவும். கம்பி நுனி ½ செ. மீ. இருக்கும்போது ஒரு வேறு வண்ண பெரிய பாசியைக் கோத்து கம்பி நுனியை நன்கு வளைத்து விடவும். இப்படி எல்லாக் கம்பிகளையும் பச்சைப் பாசியால் கோத்து நுனியில் வேறு கலர் பாசி ஒன்றே ஒன்றைக் (பூப்போல் இருக்கும்.) கோத்து. கம்பி நுனியை வளைத்து விடவும்.






ஒவ்வொரு பூந்தொட்டிக்கும் ஒரு குறிப்பிட்ட வண்ணப் பாசிமணியைப் பூவாகக் கோக்கவும்.

இப்பொழுது அழகான செயற்கைப் பூந்தொட்டிகள் பார்க் உள்ளே வைக்கத் தயார்.

இது போல் பழைய வண்ண வண்ண டூத் பேஸ்ட் பிரஷ்கள் 10 (அ) 12 எடுத்து பிரஷ் பாகத்தைப் பிளேடால் நன்கு சீவி சமனப் படுத்தவும்.

வண்ண வண்ண புது வேஸ்ட் கலர்த் துணிகள்('ப்ளெய்ன்' ஆக இருந்தால் நல்லது. பத்து பன்னிரண்டு துண்டுகளை எடுத்துக் கொள்ளவும். அல்லது டெய்லர் கடைகளில் கேட்டால் கிடைக்கும். 10 செ.மீ X 4 செ.மீ. அளவு இருக்க வேண்டும். இவற்றை முக்கோண வடிவில் கத்தரித்து ஒவ்வொரு வண்ணத் துண்டும் வேறு வண்ண டூத் பிரஷ்ஷின் நுனியில் கொடி போல் பெவிகால் வைத்து ஒட்டி விடவும். பச்சை வண்ண பிரஷுக்கு, மஞ்சள், ரோஸ், ஆரஞ்சு, வண்ண நுனி என்றபடி கான்ட்ராஸ்ட் கலர் ஒட்டவும். இந்தக் கொடிகளைப் பார்க்கின் முன் வாசல் நடைபாதை ஓரங்களில் நட்டு வைத்தால் அழகாக இருக்கும்.

வண்ணத் துணித் துண்டுகளை முக்கோண வடிவில் வெட்டிய பின் ஓரங்களைப் பொரிகத்திரியால் அரும்பரும்பாக வெட்டவும். அழகாக இருக்கும்.

— ஜெயலட்சுமி

# உங்கள் கூந்தல் தைலம்...

- கூந்தலுக்குப் பாதுகாப்பு அளிக்கிறதா?
- கூந்தலைக் கருமையாக வளரச் செய்கிறதா?
- கூந்தல் உதிர்வதை தடுக்கிறதா?
- இளநரை, பொடுகு ஆகியவற்றை அகற்றுகிறதா?

எல்லாக் கேள்விகளுக்கும்
ஒரே பதில்: ஆம்!
அளிப்பது : டாம்ப்கால்!

டாம்ப்கால் மூலிகைக் கூந்தல் தைலம் செம்பருத்தி, மருதாணி, கீழாநெல்லி, பொடுதலை உட்பட 32 மூலிகைகளின் சாறு, தேங்காய் எண்ணெய், ஆலிவ் எண்ணெய் கொண்டு இயற்கை முறையில் தயாரிக்கப்படுகிறது.



## டாம்ப்கால்

மூலிகைக்கூந்தல்தைலம்

DIPR/1568/MS/88/CANCO/TAMPCOL/462

# மறக்க முடியாத நவராத்திரி

**திருமதி முத்துலெக்ஷ்மி:**

"சென்ற ஆண்டு நவராத்திரியில் நடைபெற்ற நகைச்சுவை சம்பவம் அது. எங்கள் வீட்டில் பிரமாதமாக பத்து படிக்கட்டுகள் வைத்து படு அமர்க்களமாகக் கொலு பொம்மைகளை வைத்திருந்தோம். அடுத்த வீட்டு ஐஸ்வர்யா — மூன்று வயது சிறுமி கொலு பார்க்க வந்தாள். அவள் என்னிடம் 'மாமி இந்த பொம்மைகள் ராத்திரி என்ன செய்யும்?' என்று கேட்க நானும் விளையாட்டாக 'எல்லா பொம்மைகளும் ஓடிப் பிடித்து விளையாடும்' என்று சொல்லி விட்டேன். இரவு ஒரு மணி இருக்கும். வாசல் கதவு தடதடவென்று தட்டப்படும் சப்தம் கேட்டு பதட்டத்துடன் ஓடி வந்து கதவைத் திறந்தால் அடுத்த வீட்டு ஐஸ்வர்யா நின்று கொண்டிருந்தாள். 'மாமி.. பொம்மைகள் ஓடிப் பிடிச்சு விளையாடறதை பார்க்க வந்தேன்' என்று அவள் சொன்னதும் நான் வாய் விட்டே சிரித்து விட்டேன்.



**குமாரி செல்வி:**

"நான் ஒரு வீட்டில் வேலை பார்த்து வந்தேன்.. நவராத்திரி சமயத்தில் முதலாளியம்மா என்னை அழைத்து கண்ட கண்ட பசங்களை கொலு பார்க்க வீட்டிற்குள் விட்டு விடாதே என்று கூறியதால் நான் விழிப்புடன் வீட்டு வாசலில் இருந்தேன். ரோட்டில் கும்பலாக வரும் சிறுவர்கள் 'மாமி... வீட்டிலே கொலு இருக்கா' என்று கண்டலுக்காகக் கேட்டதும் 'இல்லை' என்று விரட்டி அடித்தேன். நவராத்திரி ஐந்தாவது நான் சட்டை இல்லாமல் டிராயர் மட்டும் போட்டு வந்த சிறுவன் வந்ததும் வழக்கம் போல் அனுப்பி விட்டேன். அந்தச் சிறுவனை கூட்டிக் கொண்டு அவன் அம்மா கோபத்துடன் 'எப்படி என் பையனை விரட்டலாம்' என்று முதலாளியம்மாவை கேட்டு வந்த போதுதான் அவர்கள் சொந்தக்காரர்கள் என்ற உண்மை தெரிந்தது. பரிதாபமாக நின்ற அந்தச் சிறுவனை பார்த்ததும் சிரிப்புதான் வந்தது.



## குமாரி மீனாக்ஷி:

"எங்கள் தெருவில் ஒரு வீட்டில் நவராத்திரி சமயத்தில் தினமும் அவர்களின் ஐந்து வயது பெண்ணுக்குக் கிருஷ்ணர், முருகன் வேடம் போட்டு விட்டு கொலு பார்க்க எல்லா வீடுகளுக்கும் அழைப்பு கொடுக்க அனுப்பி வைத்தார்கள். அந்தச் சிறுமியும், அழகாக 'எங்க வீட்டிலே கொலு... அவசியம் வாங்க' என்று அழைத்து அனைவரையும் கவர்ந்து விட்டாள். எட்டாவது நாள் 'கிருஷ்ணர்' வேடத்தில் கொலுவிற்கு அழைக்கச் சென்ற அந்தப் பெண்ணை இரவு எட்டு மணி சுமாருக்குக் காணவில்லை. என்று பரபரப்பாக தேடிக் கொண்டிருந்தார்கள்.

நானும் கவலையோடு ஒவ்வொரு வீடாக சென்று தேடினேன். எதற்கும் பார்ப்போம் என்று அடுத்த தெரு வீடுகளுக்கும் தேடப் போனேன். ஒரு வீட்டில் அவள் இருப்பதை பார்த்து 'ஏன் இங்கே வந்தாய்' என்று நான் கேட்டதும் 'நம்ம தெருவில் மட்டும் தினமும் அழைத்து எனக்கு அலுத்துப் போச்சு: அதான் இங்கே வந்தேன்' என்று அவள் சொல்லி என்னை சிரிக்க வைத்து விட்டாள்."



## திருமதி கனகாம்புஜம்:

"எங்கள் வீட்டு கொலு பார்க்க வரும் பெண்கள் நன்றாக பாடி விட்டு சுண்டல் வாங்கிச் செல்வதைப் பார்த்த எதிர் வீட்டு பாகவதர் உள்ளே வந்து 'எனக்குப் பாட்டு பாட சான்ஸே வரமாட்டேன்குது... இனிமே தினமும் இங்கே வந்து பாடப் போறேன்' என்று சொல்லி உண்மையிலேயே பாடவும் ஆரம்பித்து விட்டார். 'நவராத்திரி கொலுன்னா பொம்மனாட்டிகள் மட்டும்தான் பாடணும்னு சட்டம் ஒன்றும் கிடையாது' என்று அடம்பிடித்து கேட்க சகிக்க முடியாத குரலில் பாடிய அவரை வெளியேற்ற முடியாமல் மூன்று நாட்கள் தவித்து விட்டேன். அக்கம்பக்கத்து வீட்டுக் குழந்தைகளை அழைத்து நான்காவது நாள் அவர் பாட ஆரம்பித்து முடியும் வரை 'கைதட்ட' ஏற்பாடு செய்து விட்டேன். குழந்தைகள் கலாட்டா தாங்க முடியாமல் பாகவதர் தானாக பாட வந்ததை நிறுத்திக் கொண்டதை இப்போது நினைத்தாலும் சிரிப்பு வருகிறது."



பேட்டி: விஜயா கண்ணன்.



# யெஸ்... ரூபா ஜெகன் ஸ்பீக்கிங்

முன்பெல்லாம் மேனேஜரிடம் :போனல பேச -றதுன்னு ரொம்ப பயமா இருக்கும். அவர் இங்கிலீஷ்ல கேக்கற கேள்விக் கெல்லாம் பதில் சொல்லத் தெரியாம முழிச்சுண்டு நான் பட்ட கஷ்டத்தை சொல்லி மாளாது.

வேலையை ராஜினுமா பண்ணிடலாமான்னு நான் யோசிச்சுண்டு இருந்தப்போ விவேகானந்தா கல்வி நிலையத்தின் விளம்பரத்தை பார்த்தேன். வீட்டு வேலையையும் செஞ்சுண்டு வேலைக்கும் போயிண்டு இருக்கற என்னுல அவா நடத்தர நேர்முக வகுப்புல சேர்ந்து படிக்க நேரமிருக்காதேன்னு கவலைப் பட்டேன். தபால் மூலமா படிக்கலாம்னு அது நேர சொல்லித்தர மாதிரி இருக்குமான்னு சந்தேகமா வேற இருந்தது. தற்செயலா ஒரு நாள் என்னுடைய நாத்தனுர் பொண்ணு லலிதாகிட்ட இதுபத்தி பேசிண்டிருந்தப்போ அவ விவேகானந்தா கல்வி நிலையத்தில தபால் மூலம் இங்கிலீஷ் பேச கத்துக்கர விஷயம் தெரிஞ்சுது. பாடம் எல்லாம் நேரிடையா சொல்லிக் குடுக்கற மாதிரி இருக்கு ரொம்ப நன்னு புரியறதுன்னு அவ சொன்னு. அவ குடுத்த தைரியத்துல நான் தபால் முறை பயிற்சியில சேர்ந்தேன்.

மொதல்ல மூணு மாசம் இங்கிலீஷ் கிராமர் கத்துண்டேன். அதுக்கு அப்பறம் மூணு மாசம் ''ஸ்போக்கன் இங்கிலீஷ்'' கத்துண்டேன்.

உண்மையை சொல்லப் போனு முன்னுல மேனேஜர்கிட்ட பேசணும்னு பயந்துண்டு இருந்த நானு இப்படி இங்கிலீஷ்ல சரளமா பேசறேன்னு எனக்கே ஆச்சர்யமா இருக்கு. எங்கிட்ட ஏற்பட்டுருக்கற மாற்றத்தை என்னுல நன்னு புரிஞ்சுக்க முடியறது.

கான்வென்ட்ல படிச்சுண்டு இருக்கற என்னேட குழந்தைக்கு பாடஞ் சொல்லிக் கொடுக்கறத்துக்கு நான் கத்துண்ட இங்கிலீஷ் கிராமர் ரொம்ப உதவியா இருக்கு. ஹஸ்பண்ட் கூட எங்கேயாவது வெளில வாசல்ல போனு சந்திக்கரவாளோட இங்கிலீஷ்ல பயப்படாம பேச முடியறது.

மொத்தத்துல சொல்லப் போனு இங்கிலீஷ்ல பேச முடியலையேன்னு கவலைப்படற என்னைப் போல எத்தனையோ பேர்களுக்கு நல்ல முறைல பயிற்சியளிக்கிறது விவேகானந்தா கல்வி நிலையம்.

*"Really they are doing wonderful service".*

**ஆங்கிலத்தில் பேச விரும்பும் அனைவரும் இப்பயிற்சியில் சேர்ந்து பயன் பெறலாம். உடனே தொடர்பு கொண்டு நீங்களும் பயன் பெறுங்கள்.**

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**த. பெ. எண் : 4986**
**9, மேட்லி ரோடு, தி.நகர்,**
**சென்னை-17.**

NAGA

# நாயகியே



# நமஸ்காரம்

பொம்மைகள் பெரியதாக இருந்தால் இரண்டாவது வரிசையில் வைத்த பொம்மைகள் முதல் வரிசையிலுள்ள பொம்மைகளை மறைக்கும். எனவே படிகளை = = இந்த முறையில் அமைக்கவும். புதுமையாகவும் இருக்கும்.

கொலுவில் 'பார்க்' அமைக்கும் போது தரையில் வைக்காமல் பெஞ்ச், அல்லது கட்டிலில் வைத்தால், வந்தவர்கள் நின்றபடியே பார்க்கும் போது நிறைய நேரம் ரசிக்க முடியும்.





பிஸ்கட் பாக்கெட்டின் உள்ளே இருக்கும் பட்டர் பேப்பர்களை நீளமாக வெட்டி மலையின் மேலிருந்து கீழ் வரை களிமண்ணில் பொருத்தினால், பேப்பரின் மேடு பள்ளங்கள் நிஜப்படியாக அமைந்து விடும்.

புல் தரைகளுக்கு உமியை பச்சை சாயத்தில் நன்கு நனைத்து, ஈரமண்ணின் மேல் நெருக்கமாக தூவி விட்டால், நிஜ புல் தரை போல் பறக்காமலும் இருக்கும்.



பாசி கோர்க்கும் வெள்ளை ஒயரில் நாம் குழந்தைகளுக்கு வாங்கிக் கொடுத்திருக்கும் ஏரோப்பிளேன், ஹெலிகாப்டர் போன்ற பொம்மைகளை கட்டித் தொங்க விட்டால், அது ஃபேன் காற்றில் இங்கும் அங்குமாய் லேசாய்த் துள்ளியபடி அலைவது பறப்பது போலவே இருக்கும். ஒயர் இருப்பது கண்ணுக்குத் தெரியவும் செய்யாது.

மிகச் சிறிய கண்ணாடி, பீங்கான் பொம்மைகளை வைக்கும் போது கீழே விழுந்து உடையாமல் இருக்க பழைய பாட்டில் மூடிகளில் களிமண்ணை வைத்து, அதன் மேல் பொம்மைகளை அழுத்தி நிறுத்தி வைக்க வேண்டும்.



வீட்டிலுள்ள பழைய பவுடர் டப்பாக்களை 'கில்ட்' பேப்பரால் சுற்றி படிகளின் இரு ஓரங்களிலும் வைத்தால், கொலுதனி களை கட்டும். குழந்தைகளை விட்டே இதைச் செய்யச் சொல்லலாம்.

கொலுவின் இரு பக்கமும் விளக்கேற்றி வைக்க ஆசை. அதே சமயம் ஃபேன் போடாமல் வந்தவர்களை கொசுக்கடியில் அவஸ்தைப்படுத்தவும் முடியாது. எனவே இரண்டு பெரிய சைஸ் சிம்மினிகளை வாங்கி விளக்குகளின் மேல் கவிழ்த்தி வைத்து விடுங்கள். விளக்கு அணையாமல் இருப்பதுடன் கூடுதல் பிரகாசமும் கிடைக்கும்.



நிறைய தீப்பெட்டிகளை எடுத்து, அதன் ஒரு பக்கத்தில் சிறு சிறு சதுரங்களாக, ஜன்னல், வாசல் போன்று பொறுமையாக 'கட்' பண்ணி ஒவ்வொரு தீப்பெட்டியுடனும் பசையால் ஒட்டி, தேவையான உயரத்தில் அடுக்கி ஒட்டினால் அப்படியே 'பிளாட்' போல் தோன்றும். கற்பனை உபயோகித்து வர்ணம் தீட்டிக் கொள்ளலாம். இதையே 'குடிசை' போன்று அமைக்க ஒரு தீப்பெட்டியை கீழே நிறுத்தி வைத்து, இன்னொன்றைப் பிய்த்து இரண்டாக மடித்து வரும் பகுதியை மேலாகக் கவிழ்த்து கூரை போல் வைத்து விட வேண்டும். கீழே விழாமல் இருக்க சிறிது பசை தடவி வைக்கவும்.



குறிப்பு: கடைசியில் சகோதரிகளுக்கு ஒரு வேண்டுகோள்:

ஒருசில பெண்கள் உறவின் பெயரைச் சொல்லிக் கொண்டு வீட்டிற்குள் உரிமையுடன் வந்து பல திருட்டுகளைச் செய்து விட்டுப் போனதை சமீபத்தில் பத்திரிகைகளில் படித்திருப்பீர்கள். நவராத்திரி சமயத்தில் கொலு பார்க்க யார் வந்தாலும் (நமக்குத் தெரியாதவர்களாக இருந்தாலும்) விரட்டாமல், சென்டிமென்டிற்காகவாவது வெத்தலை, பாக்கு எடுக்க உள்ளே செல்ல நேரிடும். அதுவும் தனியாக இருப்பவர்கள் இந்தச் சமயத்தில் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

— உமா நாராயணசுவாமி.

# சொல்ல விரும்புகிறோம்



* 'மாலை சூடி வந்தேன்' பகுதி வெகு ஜோர். தம்பதிகள் விட்டுக் கொடுத்து வாழ வேண்டும் என்ற கருத்தை பட விளக்கத்துடன் தந்திருப்பது பாராட்டத்தக்கது. நல்ல கருத்துகளைக் கட்டுரையாக வழங்காமல் கதையாக, படமாகத் தந்திருப்பதால் எல்லோரும் கட்டாயம் படிப்பர். இப்பணி தொடரட்டும்.

ஸ்ரீரங்கம், பூமா வாசுதேவன்.

* 'அடித்தளம்' சிறுகதை ஒரு மருமகள் தன் குடும்பத்தின் மீது வைத்திருந்த பாசத்தையும், 'மனைவிக்கு மாம்பழம்' சிறுகதை ஒரு மனைவி, கணவன் மீது வைத்திருந்த பாசத்தையும், 'பாசம் வெளிப்பூச்சல்ல!' சிறுகதை, ஒரு சகோதரி மீது சகோதர சகோதரிகள் வெளிப்படுத்தும் பாசத்தையும் காட்டுவதாக அமைந்திருந்தன. மொத்தத்தில் எல்லாச் சிறுகதைகளும் குடும்ப உறவுகளை அடிப்படையாக வைத்து அருமையாக இருந்தது.

விருதுநகர், பா. சுந்தரி.

* நம் வாழ்க்கையின் எதிர்காலத்தை நிர்ணயம் செய்யும் விஷயத்தில் 'சேமிப்பு' என்பது பெரும் பங்கு வகிப்பதால் அவற்றின் அவசியத்தையும், எந்தெந்த வகையில் எப்படி சேமிக்கலாம் என்பதையும், பல தரப்பட்ட சேமிப்பு முறைகளின் மூலம் அறிய வைத்த கலந்துரையாடல் உருப்படியான ஓர் ஏற்பாடு.

திருச்சி — 16, ஜானகி மைந்தன்.

* இம்மாத மங்கையர் மலரை வாங்கி புரட்டியதுமே விநாயகப் பெருமானின் தரிசனம் விநாயக சதுர்த்தியை நினைவுபடுத்தியது மட்டுமின்றி அன்றைய தினம் கொழுக்கட்டை சரியாக வராமல் அல்லலுறுவோர் மகிழ்ச்சியடையும் விதத்தில் கொழுக்கட்டைத் தயாரிப்பின் போது கவனத்தில் கொள்ள வேண்டிய முக்கியக் குறிப்புக்களை வழங்கி பூரண(!) திருப்தியடைய வைத்திருக்கிறீர்கள்!

திருச்சி — 16, எஸ். ராஜகோபால்.

* 'சிரிப்பெல்லாம் இனிப்'பாக கட்டுரை படித்தேன். சிறியவர்களுக்கு மட்டுமின்றி பெரியவர்களுக்கும் பயனுள்ளவையாய் அமைந்திருந்தது.

திருவண்ணாமலை, ஆர். அருணாசலம்.

* வேலையின்றி நேரத்தை வீணாக்கிக் கொண்டிருந்த என் போன்றவர்களுக்குப் 'புதிதாய்க் கற்றுக் கொள்ளலாமே!' பகுதி பயனுள்ளதாக அமைந்திருந்தது. மூளைக்கு வேலையும், வருவாய்க்கு வழியும் வகுத்துக் கொடுத்த மங்கையர் மலருக்கு என் மனமார்ந்த பாராட்டுக்கள்!

மேட்டுப்பாளையம், எப். காமிலாபானு.

* சகோதரி ஜெயா. வி. ராமன் எழுதிய நேர்முகத் தேர்வில் 'செய்யக் கூடாதவை பத்து' — ஒவ்வொரு பாயிண்டும் இண்டர்வியூக்குச் செல்லும் நபர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டியது அவசியம்.

மதுரை — 1, டி. சண்முக சுந்தரி.

* இணைப்பு — படு அருமை! இட்டத்தட்ட எல்லாப் பொருள்களையுமே செய்து பார்த்தாகி விட்டது. குட்டி கைவினைப் பொருள் கண்காட்சியாகவே காட்சியளிக்கிறது எங்கள் வீட்டு வரவேற்பறை! நன்றி! பெண்கள் கூறியவை அனைத்தும் எல்லாரும் தெரிந்து கொள்ள வேண்டிய அவசிய செய்திகள் உங்கள் மூலம் அவைகளை கஷ்டப்படாமல் கற்றுக் கொள்ள முடிந்தமைக்கு நன்றிகள் — பல கோடி! வண்ணமயமான நவராத்திரி இதழினை காண இப்போதே நெஞ்சம் அலாவுகிறது.

திருவண்ணாமலை, ராதா ராமலிங்கம்.

* பாசம் வெளிப்பூச்சல்ல என்ற சிறுகதை வெகு அருமை. அதில் உடன் பிறந்தவர்களின் பாசத்தை அழகாகக் காட்டியுள்ளார் ரத்னா!

காஞ்சிபுரம், அனுராதா ரங்கநாதன்.

**தூ**க்கம் வரவில்லை. புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தேன்.

அழுகை அழுகையாக வந்தது. எனக்குத் துக்கம் தாங்க முடியவில்லை.

''இதுதான் **breaking point.** நாளை என்னால் இந்த வாழ்க்கையைத் தொடர முடியாது. எதையாவது சாப்பிட்டு, ஏதாவது செய்து கொண்டு நாளைக்கு இதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்'' என்று மனத்தில் எண்ணங்கள் அதிவேகமாக ஓடிக் கொண்டிருந்தன..

ரிலாக்ஸ் பண்ண முடியவில்லை. பகவன் நாமாவை சொல்ல, தியானத்தில் ஈடுபட்ட மனம் அடங்கவில்லை.

எழுந்து மணி பார்த்தேன். பத்தரை ஆகியிருந்தது. கொஞ்ச நேரம் காத்தாட மொட்டை மாடியில் போய் நடந்து விட்டு வரலாம் என்று தோன்றியது.

மேலே போனதும் முன்னும் பின்னும் விருட் விருட் என்று நடந்தேன்.

இரண்டு நாட்களில் பௌர்ணமி வருகிறது போல் இருக்கிறது. நிலா 'பளிச்' சென்றிருந்தது. இலேசாக., மிக லேசாக குளிர்ந்த காற்றடித்தது. சில சமயம் தென்னை மரத்து ஓலை சரசரத்தது. தெருவில் எந்த நடமாட்டமும் இல்லாமல் பாதி ராத்திரி போல் இருந்தது.

அலைபாயும் மனம் ஒரு நிதானத்துக்கு வந்து கேள்வி கேட்க ஆரம்பித்தது.

வாழ்க்கை ஏன் இப்படி இருக்கிறது? ஒரே சீராக இன்பமாக ஏன் நாட்கள் போக மாட்டேன் என்கிறது. இரண்டடி மேலே போனால் மூன்றடி சறுக்குவது போல் இருக்கிறதே.

'வாழ்க்கையில் எத்தனையோ கஷ்டங்கள் வரும். சமாளிக்கத்தான் வேண்டும். இதைவிட கஷ்டப்படுபவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள்; என்ப

# மனமெல்லாம் போதுமே!

தெல்லாம் தெரிந்தாலும் ஒவ்வொரு முறை கஷ்டம் வரும் பொழுதும், மனம் துவண்டு போய் விடுகிறேனே. கஷ்டமும், சந்தோஷ மின்மையும்தான் நிரந்தரம், நாளை இன்ப மாக விடியவே விடியாது என்று நெகடி வான எண்ணமே தோன்றுகிறதே.

இதோ இந்தத் தூங்கு மூஞ்சி மரம் இருக் கிறது. நாம் இந்த வீட்டிற்கு வருவதற்கு முன்பே இருந்த மரம். அதன் பாட்டுக்கு தரையில் வேரை ஆழமாக ஊன்றிக் கொண்டு, ஆகாசத்தை நோக்கி கைகளை விரித்துக் கொண்டு, எவ்வளவு அழகாக, உயர்ந்து, படர்ந்து வளர்ந்திருக்கிறது.

சின்னச் சின்ன அழகான, நளினமான, ரோஜா வண்ணப் பூக்கள்.

நிலா வெளிச்சத்தில், லேசான காற்றி னால் இலைகள் ரகசியம் பேசுவது போல், அசைந்து கொண்டு எவ்வளவு கம்பீரமாக, கவலையற்று, இதுவே சொர்க்கம் என்பது போல் நிற்கிறது. இதுபோல் நான் பிறந் திருக்கக் கூடாதா? சந்தோஷமாக இருந் திருக்கலாமே.

'நிஜமாகவா, அது சாத்தியமா, யோசிக் காமல் சொல்கிறேனா?'

இதுவும் ஒரு தாய் மரத்திலிருந்து தானே வந்திருக்கும். விதையாகவே தாயிடமிருந்து பிரிந்து, பல உடன் பிறப்புடன் நர்சரியில் வளர்ந்து, எங்கேயோ முன்பின் பரிச்சய மில்லாத, இடத்தில், மாறுபட்ட சூழ்நிலை யில், கார்ப்பரேஷன்காரர்களால் கொண்டு நடப்பட்ட சின்ன கன்றுதானே, இன்று இப்படி வளர்ந்திருக்கிறது.

முதலில் கொஞ்ச காலத்திற்கு ஆடு மாடு சாப்பிடாமல் மரத்தடுப்பு இருந்திருக்கும். ஒரு வாரம் செடி பிடித்துக் கொள்ளும் வரை யாரோ கொஞ்சம் ஜலம் விட்டிருப் பார்கள்.

அதற்குப் பிறகு — மரம் வைத்தவன் கூட தண்ணீர் விடாமல் — தானே தன்னைக் காத்துக் கொண்டுதானே வளர்ந்திருக்கிறது. மனோதைரியமும், தன்னம்பிக்கையும் தானே அதற்குத் துணை.

இந்தச் செடி மட்டும் அப்பொழுதே, எங்கம்மாவை விட்டு விட்டு வந்து விட் டேன், இந்த புது இடம் பிடிக்கவில்லை, தண்ணீர் போறாது, உரம் போறாது, வேரில் கல் தட்டியது என்று உயிரை விட்டிருந்தால் இன்று இவ்வளவு கம்பீரமாக, அழகாகக் காட்சியளிக்க முடியுமா?

தன் மேல் படரும் கொடிக்கு ஆதரவாக இருந்து, தன்னிடமிருந்தே சத்தை உறிந்து கொள்ளும் புல்லுருவிச் செடிக்கும் ஆதார மாக இருந்து, நீ அகலமாக வளருகிறாயா? நான் உயரமாக வளருகிறேன். இங்கு வெய் யில் போறவில்லையா? வளைந்து சென்று வளருகிறேன். இந்த வருடம் மழை போற வில்லையா? வளர்ச்சியைக் குறைத்துக் கொண்டு நறுங்கலாக வளருகிறேன். இந்த அடிமட்ட நீர் வற்றி விட்டதா? இதற்கும் ஆழமாக வேரைச் செலுத்துகிறேன். வேர் கீழே போக முடியாமல் பாறையாக இருக் கிறதா, மேல் வழியாகவே சென்று மண் ணைத் தேடுகிறேன் என்றல்லவா வளரு கிறது. ஒரு கிளையில் கரையான் புற்று கட்டி யதா, ஒரு கிளையை எலக்ட்ரிக் ஒயர் படு கிறது என்று வெட்டி விட்டார்களா? ஒரு கிளையை மாடு இழுத்து இலையைச் சாப் பிட்டு உடைத்ததா? மற்றதை குழந்தைகள் விளையாடி உடைத்தார்களா? பரவா யில்லை உடைந்த பாகத்தை குணப்படுத்திக் கொண்டு, புதிதாக வேறு இரண்டு இடத் தில் துளிர்க்கிறேன்.

அடி மரத்தில் ஆணி அடித்து கடைக்குப் பெயர் பலகை மாட்டுகிறாயா? காதலர்கள் இதயத்தில், அம்பு வரைகிறார்களா, சும்மா நிற்கும் பொழுது ஜனங்கள் கையை வைத் துக் கொண்டு சும்மா இல்லாமல் இலை யைக் கிள்ளிக் கிள்ளி போடுகிறார்களா?

இது எதையும் பொருட்படுத்தாமல், பறவைகளுக்கும் கூடு கட்டி வாழ இடம் கொடுத்துக் கொண்டு, எல்லாவற்றுக்கும் அட்ஜஸ்ட் செய்து கொண்டு நான் படைக் கப்பட்டதின் காரணம் என் விதையில் அடங்கியிருக்கிறது என்பதை ஏற்றுக் கொண்டு ஒரே குறிக்கோளுடன் வளர வில்லையா?

இப்படி இம்சை செய்தால் வளர மாட் டேன், இது கிடைக்கா விட்டால் பட்டுப் போய் விடுவேன் என்றால் நஷ்டம் யாருக்கு?

"உணர்ச்சியே இல்லாத மரம் தானே? ஜடமாக வளரலாம்."

மரம் ஜடமா? இல்லையே. பாட்டுப் பாடினால் நன்றாக வளருகிறது. அன்புடன் பேசினால் அழகாகத் துளிர்க்கிறது. தன்னை வெட்ட வருபவனைப் பார்த்து, நடுங்குகிறது. தன் பார்வையில் கொலை நடந்தால், கொலைகாரனை மறுபடி பார்த் தால் கூட நினைவு வைத்துக் கொண்டு

சப்பாத்தி, பூரி இவற்றிற்குத் தொட் டுக் கொள்ள மசாலா (பட்டாணி, உரு ளைக்கிழங்கு எதுவானாலும் சரி) செய் யும்போது, இறக்குவதற்கு முன், ஒரு டேபிள் ஸ்பூன் சற்று புளித்த தயிரை விட்டு, கலந்து, ஒரு கொதி வந்ததும் இறக்கினால் மசாலா சூப்பராக அமைந்து விடும்.

— மீனா ரமணி.

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது: பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*



6 மாதங்களிலிருந்து



4 மாதங்களிலிருந்து



6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/5112/TAM

பயம் கொள்கிறது.

தன்னை ஏதாவது வைரஸ் கிருமி தாக்கும் பொழுது, ஒருவிதமான ரசாயன வாசனையை வெளியிட்டு, மற்ற மரங்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள, எச்சரிக்கை செய்கிறது. தன் நிழலிலேயே தன் கன்றுகளை ஆதரவாக வளர்க்கிறது. இவைகளுக்கா உணர்ச்சியில்லை?

ஒருமுறை என் மகன் விஜய்க்கும் எனக்கும் நடந்த சம்பாஷணை ஞாபகத்துக்கு வருகிறது.

நான் தோட்டத்தில் பூ பறித்துக் கொண்டிருந்தேன்.

இது பாவமம்மா. நன்றாக அழகாக செடியில் பூத்திருக்கும் பூவைக் கிள்ளி எடுக்கலாமா? என்றான் விஜய்.

"பெருமாளுக்குப் போடத்தானே எடுக்கிறேன். தன்னில் பூத்த பூ பூஜைக்கு உபயோகப்படுகிறது என்று செடி எவ்வளவு பெருமைப்படும் விஜய்ப்பா," என்று எனக்குத் தெரிந்த தத்துவத்தைச் சொன்னேன்.

"இல்லையம்மா. பூ இப்படி பூத்து அழகையும் வாசனையையும், பரப்பும் பொழுதே அது, தான் பிறந்ததின் குறிக்கோளை நிறைவேற்றி விட்டது. மனிதர்களைப் போல் அதற்கு இலட்சியம் என்றோ, தெய்வத் திருவடி அடைய வேண்டுமென்றோ ஒரு வேதாந்தம் தெரியாது" என்றான்.

இன்று அதை நினைத்துப் பார்க்கும் பொழுது, எவ்வளவு உண்மை என்று தெரிகிறது.

இந்த மரம் எதை எதிர்பார்த்து வளர்ந்தது. இதன் பூவை பூஜையிலும் சேர்க்கவில்லை. மலர் அலங்காரங்களிலும் பங்கு கொடுக்கவில்லை. யாராவது பூவைக் கையில் எடுத்து, உன்னிப்பாக பார்க்கிறார்களா, தெரியாது. மற்றவர்கள் புகழ்ச்சிக்காகவோ பாராட்டுக்காகவோ, இல்லாமல் தன் சுபாவமாக வளருகிறதே. ஆறறிவு படைத்த மனிதனுக்கு இல்லாத ஏதோ ஒரு குணம் இதனிடம் சிறப்பாக இருக்கிறதே.

நானே கேள்வி கேட்டு நானே பதில் சொல்லிக் கொண்டேனா? என் உள் மனம் பேசியதா? அல்லது அந்த மரம்தான் பேசியதா?

"அது அரசமரம் கூட இல்லையே?" தூணிலும், இருப்பார் துரும்பிலும் இருப்பார் என்பவர் தூங்குமூஞ்சி மரத்தில் இருக்க மாட்டாரா? இருப்பார், இருப்பார், நிச்சயமாக இருப்பார்.

எனக்குத் தூக்கம் வந்து விட்டது. நாளை செய்ய வேண்டிய வேலைகள் நிறைய இருக்கின்றன.

மாடிக் கதவைச் சாத்தி தாழ்ப்பாள் போட்டு விட்டு கீழே போனேன்.

— ரோஹிணி

# மழலை தவழும் வீட்டிலே மகிழ்வூட்டும் ஒரு செய்தி!

இதோ

## wraps©

டிஸ்போஸபிள் டயப்பர்ஸ்

ராப்ஸ் டிஸ்போஸபிள் டயப்பர்ஸ், அதாவது உபயோகித்தபின் தூக்கி எறிந்து விடலாம். உங்களுடைய அன்புச்செல்வத்தின் அடிப்பகுதி ஈரமாகிறதே என்ற கவலை இனி வேண்டாம். பச்சிளம் குழந்தையின் பட்டு மேனியில் படியும் ஈரத்தை உங்களைப் போன்றே பாசம் காட்டி பரிவுடன் ஒற்றி எடுக்கிறது ராப்ஸ்.

**இரவோ, பகலோ-எந்நேரமும் அருகில் இருக்கட்டும் ராப்ஸ்**

ராப்ஸில் அமைந்துள்ள பிண்ணப்படாத உட்புற லைனிங் துணி ஈரத்தை உறிஞ்சுகிறது. உங்களுடைய அருமைக் குழந்தைக்கு சரப்புண் வருமோ என்ற பயம் இனி வேண்டாம்.

**ராப்ஸ் இருந்தாலே அலாதி சுகம்**

ராப்ஸ் டயப்பர்ஸில், கூடுதல் கனமுள்ள பஞ்சுப்பொருள் வைக்கப்பட்டுள்ளது. அது உங்கள்குழந்தையின் அடிப்பகுதி ஈரத்தை ஒற்றி எடுக்கிறது பரிவோடு. எனவே, குழந்தை சௌகரியமாகத் தவழ்ந்து விளையாடலாம் தடையின்றி.

**ராப்ஸ் என்றாலே 100% பாதுகாப்பு**

ராப்ஸ் டயப்பர்ஸின் வெளிப்புறம் விசேஷ பேபி கேர் பாலித்தீன் கொண்டு செய்யப்பட்டது. கால் நுழைக்கும் பகுதி இலாஸ்டிக்கால் ஆனது என்பதால் 'கசிவதும்' இல்லை.

**ராப்ஸ் இருந்தாலே எவ்வளவோ வசதி**

குழந்தையின் இடுப்பைச் சுற்றி ராப்ஸ் கட்டுங்கள். கட்டுவதோ எளிது. 'பின்' போட்டு குத்தி கஷ்டப்பட வேண்டாம். ஒட்டவும், பிய்க்கவும் வசதியான டேப் கைகொடுக்கிறது. ஈரத்துணிகளை பையில் திணித்துக் கொண்டு அலைய வேண்டாம். எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் செல்லலாம் குழந்தையை இனி கவலை இன்றி.

உலகெங்கிலும் டயப்பர்ஸ் பிரபலமாகிவிட்டது என்பதில் வியப்பில்லை. ஏனென்றால், எல்லா தட்ப வெப்ப நிலைகளுக்கும் இது ஏற்றது.

ராப்ஸ் டயப்பர்ஸ் இருந்தாலே-கவலை என்பது இனி இல்லை




டிரைடண்ட் ராப்ஸ் இந்தியா லிட்,

பெட்டி எண்-7079, புது தில்லி-110 001









**உங்கள் குழந்தையின் வசதிக்காகவே சர்வதேசத் தரமுடைய டயப்பர்ஸ்**

# சாம்பியனின் புதிய ரகசியம்!

## பூஸ்ட்
## இப்போது கூடுதல் விட்டமின் சக்தியுடன்!

"எனக்கு மிகவும் தேவைப்படும் வேளையில் கூடுதல் விட்டமின்களையும் சக்தியையும் அளிக்கிறது."

கூடுதல் விட்டமின் சக்தி.

இப்போது பூஸ்ட், வளரும் குழந்தைகளின் அன்றாடத் தேவைகளுக்கு வேண்டிய சக்தியை தருவதற்கென்றே விசேஷமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கூடுதல் விட்டமின்களை கொண்டுள்ளது.




கூடுதல் விட்டமின் சக்தியுடன்

# பூஸ்ட்

விட்டமின் அடங்கிய சக்தியளிக்கும் எரிபொருள்

HTA 6008 TAM




### ஊருக்குப் போன போது......

லீவு விட்டாச்சு. நிம்மதியாக பத்து, பதினைந்து நாளாவது எங்காவது சென்று விட்டு வர வேண்டும் என்ற என் கோரிக்கையை ஆமோதித்தார் என் கணவர். பிளான் இப்படி: சேலத்திலிருந்து நேரே தஞ்சை அப்பா, அம்மா, அக்கா, அண்ணன் இவர்களைக் காண. அங்கிருந்து திருச்சி அருகிலுள்ள பெருவளநல்லூர் என் தங்கை வளைகாப்பு, சீமந்தம் காண. அங்கிருந்து கோயம்புத்தூர் அத்தை வீட்டிற்கு. 2 நாள் தங்கி எல்லா இடங்களும் காண வேண்டும். அங்கிருந்து கள்ளிக்கோட்டை மாமனார் வீடு. மாமனார், மாமியார், நாத்தனார்கள், மச்சினர்கள் எல்லார் வீட்டிலும் ஒவ்வொரு நாள் இருந்து விட்டு பிறகு நேரே சேலம்.

சேலம் பஸ்-ஸ்டாண்டில் பஸ் ஏறினோம். 5 மணிக்கு நாமக்கல் அருகில் சோதனைக்குக் கொடியேற்றம் நடந்தது. பஸ் பிரேக் டவுன் 1½ மணி நேரம் பஸ்ஸை விட்டு இறங்கி நின்றோம். டிக்கெட் திருச்சிக்கே வாங்கி விட்டதால் வேறு பஸ்ஸிலும் ஏற முடியாமல், தாகத்திற்குத் தண்ணீர் கூட இல்லாத இடத்தில் நின்று, சலித்து, ஏறினோம் பஸ்ஸில். திருச்சிக்கு 10 மணிக்கு வந்தோம். தஞ்சை பஸ்ஸில் ஏறினோம். வல்லத்திற்கு அருகில் எங்கள் பஸ் டிரைவருக்கும், எதிரில் வந்த லாரி டிரைவருக்கும் தகராறு. தீர்ந்தது கதை. 1 மணி நேரம் பஸ் இம்மி கூட நகரவில்லை. 12½ மணிக்கு தஞ்சையில் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்து, படுத்தோம் பட்டினியோடு.

மறுநாள் பெருவளநல்லூரில் வளைகாப்பு விழா. மறுமணை அடுக்க அமர வைத்த என் கழுத்தை சந்தனம் பூச வந்த என் அக்கா பார்த்து, நெக்லெஸ் எங்கே எனக் கேட்க, வெடித்தது பூகம்பம். மணையை விட்டு எழும்ப முடியாமல் நான் கவலையோடு வளையல் போட்டுக் கொள்ள, மற்ற அனைவரும் ஓடி ஆடி நெக்லெஸை தேட அரைமணி நேரம் ஓயா அமர்க்களம். நாங்கள் தங்கி இருந்த வீட்டிற்கும், வளைகாப்பு வீட்டிற்கும் 100 அடி தூரம் மணல்வெளி. தொலைந்தது நெக்லெஸ் என்று எல்லோரும் புலம்ப, சிலீரென்று என் நெஞ்சில் ஏதோ இடற, தொட்டுப் பார்த்தால், ரவிக்கைக்குள் நெக்லெஸ். கழண்டு போன நெக்லெஸ்; ரவிக்கையிலேயே விழுந்துள்ளது.

ஒருவழியாக திருச்சியில் பஸ் ஏறி கோயம்புத்தூர் வந்து சேர்ந்தோம். விடியற் காலையில் பஸ்ஸில் சீட் வசதி சரியாக இல்லாததால் குழந்தையை, இரவு முழுவதும் இருவருமாக மாற்றி, மாற்றி வைத்து புரட்டி எடுத்து விட்டோம். அவளுக்கு ½ டிக்கெட் வாங்கியும் இடம் தர மறுத்து விட்டதால். ஒருவழியாக அத்தை வீடு வந்து சேர்ந்தோம். பல் தேய்க்கும் முதல் வேலை. என் பெண்ணின் காதை கவனித்த கணவர் அலறினார். பவுன் தோடு காணோம். 5 நிமிடம் வீடு அல்லோல கல்லோலப்பட்டது. என்னை அவர் சாட, அவரை நான் சாட.

என் அத்தை மகனை அழைத்துக் கொண்டு ஓடினார் என் கணவர் திருவள்ளுவர் பஸ் நிலையத்தை நோக்கி. அங்கே பஸ் இல்லை. பஸ்ஸை சுத்தமாக அலம்பி விடுவார்களாம். பணிமனைக்குப் போய் விட்டது பஸ். ஓடினார்கள் அங்கே. நல்லவேளை. அலம்ப ஆரம்பித்திருந்தார்கள். பஸ் முழுவதும் தேடி கண்டுபிடித்தார்கள் தோட்டை. தோடு போனாலும் பரவாயில்லை, நிம்மதி இல்லாமல் போய் விடுமே என்று வீட்டில் இருந்தபடி தோடு கிடைக்க ஆண்டவனை வேண்டிக் கொண்டேன். நல்லவேளை கிடைத்தது.

மாலை. மருதமலை செல்ல அலங்காரம் செய்து மகளை ரெடி செய்து விட்டு, நான் ரெடியாகிக் கொண்டிருந்தேன். தொபீர் எனச் சத்தம் கேட்டு வாசலை நோக்கி அனைவரும் ஓட, பெரிய தண்ணீர் தொட்டியின் மேலுள்ள 'அஸ்பெஸ்டாஸ்' மூடியின் பின்பக்கமாய் நகர்ந்து வந்து என் மகள் ஏற, ஓரிடம் மட்டும் பொத்தலாகி நீருக்குள் விழுந்திருக்கிறாள் மகள். தண்ணீர் தொட்டியின் கதவைத் திறந்து குழந்தையை வெளியே எடுப்பதற்குள் போதும், போதும் என்றாகி விட்டது. தொட்டியின் பாதியிலோ, பைப் பிலோ விழுந்திருந்தால் அவ்வளவுதான். மண்டை பிளந்திருக்கும்.

என் மகளின் உயிரைக் காப்பாற்றிய தால், கோவிலுக்குப் பிளான் போட்டபடி சென்றோம்.

சென்றோம் கள்ளிக்கோட்டை. அங்கிருந்து 1½ மணி நேர பயணமாக கினாலூர் எஸ்டேட் என்ற இடத்தில் என் மைத்துனர் வீடு.

அழகான கோபுரம் அமைத்த கல் மோதிரம் என்னுடையது. பாத்ரூமில் முகம் கழுவ கழட்டினேன். லெட்ரின் குழாயில் மாட்டினேன். தண்ணீர் வரவில்லை அப்போது. ஆகவே மாட்டினேன். எடுத்து வர மறந்து விட்டேன். டிரஸ் செய்து கொண்டு ஊருக்

தும் வந்து விட்டேன். பஸ் ஒத்துக் கொள்ளாது எனக்கு. ஆகவே மயக்கமாக என் பெரிய மைத்துனர் வீட்டில் வந்து படுத்து விட்டேன். காலை 9 மணிக்கு வந்தோம். மணி ஒன்று எழுந்திருக்கும் போது. பசி வயிற்றைக் கிள்ளியது. குளித்துவிட்டு சாப்பிட வேண்டும். கையைப் பார்த்தேன். மோதிரம் இல்லை! பகீரென்றது. லெட்ரீன் குழாயில் தொங்க விட்டது ஞாபகம் வந்தது. இப்போது சொன்னால் யாரும் சாப்பிட மாட்டார்கள். நம்மையும் சாப்பிட விட மாட்டார்கள் என்று சத்தம் போடாமல் குளித்தேன். எல்லோரும் சாப்பிட்டோம். 2½ மணிக்கு விஷயத்தை வெளியிட்டேன். வீடு திமிலோகப்பட்டது.

என்னை அதுவரை திட்டியிராத என் மாமியார், மாமனார், நாத்தனார் கூட அன்று கடிந்து கொண்டார்கள். நான் கிளம்பிய வேளை சரியில்லை என்பதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும். அன்று 3½ மணி பஸ்ஸிற்கு என் மைத்துனர். குடும்பம் கள்ளிக் கோட்டை வரப் போகிறது. 3 நாள் கழித்துத்தான் திரும்புவார்கள். அதற்குள் நாங்கள் சேலம் திரும்ப வேண்டும். டிரங்கால் புக் செய்தோம். கிடைக்கவில்லை.

5 மணிக்கு அவர்கள் வந்தார்கள். மோதிரம் என்று நாங்கள் ஆரம்பிக்க, சரவெடி போல் வெடித்தார்கள் அவர்கள். காரணம், நான் கழட்டி மாட்டிய மோதிரத்தை, ஐயா! சித்தி மோதிரம் எனச் சொல்லி, என் மைத்துனர் மகள் எடுத்து வாயில் வைத்துக் கொண்டு டாய்லெட் போக, வாயிலிருந்து மோதிரம் நழுவி லெட்ரீன் பேஸினுக்குள் விழ, குழந்தை பயந்து கொண்டு அழ, அம்மா அடி, அடி என்று அடிக்க உண்மையை மகள் சொல்ல, என்ன செய்வதெனத் தெரியாமல் என் மன்னி விழித்து, லெட்டர் எழுதி தன் கணவர் ஆபீஸுக்குக் கொடுத்து விட, அவர் வந்து பேஸினுள் கைவிட்டு தேடி, நல்லவேளை உள்ளே போகாமல் இருந்ததால் எடுத்து விட்டாராம். வெடிக்க மாட்டார்களா பின்னே!

அப்பப்பா, எனக்கு மோதிரமே வேண்டாம் என்று நான் கண் கலங்கியபடியே என் கணவரிடம் கொடுத்து விட்டேன்.

ஊருக்குக் கிளம்பும் நாள் வந்தது. ரெயிலில் ஏறினோம். சேலம் வந்தது. அப்பாடா! நிம்மதி என்றபடி இறங்கினேன் வண்டியை விட்டு. ஒரே ஒரு அட்டை பெட்டியை இறக்கினார் என் கணவர். ரெயில் கிளம்பி விட்டது. ஸ்டேஷன் அல்லோகல்லோலப் பட்டது. என் கணவர் ஏறி விட்டார் ரெயிலில் மற்ற லக்கேஜை எடுத்து வர. என்ன செய்வதென்று புரியாமல் குழந்தையோடு நான் விழித்தபடி நிற்க தொபீர் என்று எங்கள் அட்டை பெட்டியில், அவசரமாக இறங்கிய ஒரு இரட்டை நாடி ஆள் விழ. 120 கிலோ இருப்பார். அட்டைப் பெட்டி 'சப்' பென்று நசுங்கியது. ஒருபக்கம் புளி, மறுபக்கம் தேங்காய், தேங்காய் எண்ணை வைத்திருந்தோம். புளி இருந்த பக்கம்



விழவே தப்பித்தோம். (நான் ரசத்திற்கு புளி கரைப்பதே இல்லை. அன்றே சட்னி ஆகி விட்டதே) கரைக்க அவசியமில்லை. எண்ணைப் பக்கம் விழுந்திருந்தால் நான் ஸ்டேஷனில் கிளீனர் வேலைப் பார்த்திருக்க வேண்டும். முதல் நாள் நாமக்கல்லில் கொடியேற்றம். இன்று ஸ்டேஷனில் மங்களம் பாடினார் அந்த ஆள். லக்கேஜ் சகிதம் இறங்கிய என் கணவர் அட்டைப் பெட்டியைப் பார்த்து, கதை கேட்டு வேதனையோடு சிரிக்க, அப்பப்பா சீக்கிரம் வீடு போய் சேருவோம் என நான் பயப்பட, ஒரு வழியாக ஆட்டோ வைத்துக் கொண்டு வீடு வந்தோம்.

ஆட்டோவில் வந்திறங்கிய எங்களைச் சுற்றிலும் உள்ளவர்கள், ஜாலியாக 15 நாள் போய் வந்தாயா எனக் கேட்க, ஆமாம் ரொம்ப ஜாலி. சீக்கிரமாக வாசலில் தடுக்கி விழாமல் உள்ளே போய் விட்டு வந்து விடுகிறேன். பயணம் முடிந்தது என்று உள்ளே ஓடினேன். ஆண்டவனுக்கு ஒரு நமஸ்காரம் செய்தேன். சோதனைகள் வந்தாலும் எப்படியோ எங்களைக் காப்பாற்றி, கொண்டு வந்து சேர்த்து விட்டாய், நன்றி என்றேன்.

இப்போது என் கணவர், என்னைப் பார்த்து, ஜாலியாக எங்கேயாவது என ஆரம்பித்தால் போதும், ஓடிப் போய் வாயைப் பொத்தி, போதும், வீட்டிலுள்ள ஜாலியே போதும் என அலற ஆரம்பித்து விடுகிறேன்.

— திருமதி கமலா.

நான் ஸின்த்தால் உபயோகிக்கிறேன். நீங்கள்?






விநோதின் உடலுக்கும் உள்ளத்திற்கும் தன்னம்பிக்கை தருவது ஸின்த்தால்

MADISON-C-001-TAM

# ஐலவ்

நினைக்க நினைக்க மனத்தின் அரற்றல் அதிகமாகிக் கொண்டே போனது ஜானாவிற்கு.

'ச்சே... என்ன வார்த்தை பேசி விட்டான்'

இத்தனைக்கும் அருணும் அவளும் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டவர்கள். இவளுடைய சரளமான பேச்சும், கலகலப்பான சுபாவமும், வெடுக்கென்று வரும் பதில்களும் அவனை மிகவும் கவர்ந்து விட்டன.

'உன்கிட்டே எனக்குப் பிடிச்சதே இந்த சுபாவம்தான் ஜானா' என்று திருமணத்திற்கு முன் பல தடவைகள் சொல்லியிருக்கிறான்.



சில நண்பர்களின் ஆதரவும் சேர, தடைகள் எல்லாம் விலகி இவர்கள் கல்யாணம் நடந்தது.

குறிப்பாக.... ராஜனுடைய உதவி.

இவள் தளர்ந்து போன போதெல்லாம் ஆறுதல் சொல்லி தைரியமூட்டியவன்.

'என்னோட உதவி உனக்கு நிச்சயம் உண்டு ஜானா. உங்க வீட்டுல சொல்லி சம்மதிக்க வைக்கிறது என்னோட பொறுப்பு' என்பான்.

அருணின் வீட்டிலும் பேசி அவர்களை இணங்க வைத்ததும் ராஜன்தான். அப்படிப்பட்டவனைப் பற்றியா... ஜானாவுக்குக் கசந்தது மனசுக்குள்.

காலையில் அலுவலகத்திற்குக் கிளம்பியவனை வழிமறித்தாள்.

''ஏன் இப்ப ராஜனைப் பார்க்க முடியலே. இங்கே வரவே இல்லையே''

''ப்ச''

''ஏதாவது உடம்பா...'' என்றாள் மறுபடியும்.

நாத்தனார் சந்திராவின் கேலிச் சிரிப்பை அவள் கவனிக்கவில்லை. அருணுக்கு அவள் ஏதோ சைகை செய்ததையும் பார்க்கவில்லை.

''இன்னைக்கு போன் பண்றீங்களா..''

பட்டென்று வெடித்தான்.

''ஸ்டாப் இட் ஐ ஸே. இனிமே அவன் இங்கே வரமாட்டான். நீயும் அவனைப் பற்றி பேசக் கூடாது''

''ஏன்... என்ன தப்பு அதுல..''

''ச்சீ... என்ன தப்புன்னா கேட்கறே.

# ழ



கல்யாணத்துக்கு முன்னால நீ எப்படி வேணா இருந்திருக்கலாம். ஆனா இப்ப என் கண்ட்ரோல்லதான் நீ இருக்கணும். புரிஞ்சுதா''

முகம் சிவந்து கண்கள் கலங்கி விட்டன அவளுக்கு. அவன் இரைச்சல் மனசுக்குள் அவமானம் தர, வழக்கமான சுபாவத்துடன் வாயாடினாள்.

''ஏன்... இப்படி என்னவோ போல பேசறீங்க. உங்களுக்கு என்ன பைத்தியமா?''

'பளார்.'

வாங்கிய அறையில் திடுக்கிட்டுப் போனாள் ஜானா.

''நானும் கவனிச்சுகிட்டுதான் வரேன். அவனுக்குத்தான் அறிவில்லேன்னா உனக்கு எங்கே போச்சு. கையைத் தொட்டு தூக்கி... விளையாடற வயசா.. இது. ஏய்... உனக்கு இதுதான் கடைசி வார்னிங். இனிமே அவன் இங்கே வரமாட்டான். நீயும் ஒழுங்கா இருக்க முயற்சி பண்ணு.''

விருட்டென்று வெளியே போய் விட்டான். ஜானா கண்ணீரை அடக்க இயலாமல் பெட்ரூமிற்குள் நுழைந்து தாளிட்டுக் கொண்டு விட்டாள்.

துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது. என்ன நடந்தது. ஏன் இப்படி அநாகரிகமாக நடந்து கொள்கிறான்...

சமீப காலமாகவே அவன் செயல்கள் ஒவ்வொன்றும் விசித்திரமாகவே இருந்தன. காதலிக்கும் போது பரஸ்பரம் இருந்த நல்ல குணங்கள் மட்டும்தான் புலனாகின. இப்போதோ எதற்கு எடுத்தாலும் பொறுமை இழப்பதும் ஆங்காரத்துடன் வெடிப்பதுமான அவனது இன்னொரு பரிமாணம் அவளைப் பயமுறுத்தியது.

என்ன பேசி விட்டான்....

இரண்டு மாதங்களுக்கு முன் மூவருமாக ஒரு சினிமாவிற்குப் போனார்கள்.

ராஜன் வெகு நாட்களுக்குப் பின் அன்றுதான் வந்திருந்தான். இவர்களின் திருமணத்திற்குப் பின் அடிக்கடி வருவதில்லை.

அந்த சந்தோஷத்தில் ஹோட்டலில் டிபன்; சினிமா என்று ஏற்பாடானது.

டிபன் சாப்பிட்டதும் ராஜன் வேடிக்கையாக சேரில் சாய்ந்து கொண்டான்.

''ஹப்பா... டிபன் ஃபுல். என்னால எழுந்திருக்க முடியலே''

ஜானா வேடிக்கையாக சட்டென்று கைநீட்டினாள்.

''தாத்தா.... இதைப் பிடிச்சுகிட்டு எழுந்திருங்க...''

ராஜனும் விகல்பமின்றி அவள் கையைப் பற்றி எழுந்து கொண்டான்.

''சரி, சரி. ஒரு பாட்டியைத் தேட வேண்டியதுதான். அப்பதான் ஜோடிப் பொருத்தம்.

இருக்கும்'' என்றாள் மேலும் கிண்டலாக.

அருண் அப்போது எதுவும் பேசவில்லை. மனம் சங்கடப்பட்டதாகக் கூட காட்டிக் கொள்ளவில்லை.

இத்தனை நாட்கள் அதை மனத்தில் வைத்திருந்து... ச்சே... அன்றே கண்டித்திருந்தால் கூட வருத்தம் வந்திருக்காது ஜானாவிற்கு. இவ்வளவு நாட்கள் கழித்து இப்போது சொல்லிக் காட்டுகிறானே...

மாலையில் அவன் அலுவலகத்திலிருந்து திரும்பியதும் அவளைப் பற்றி விசாரிப்பது கேட்டது.

''அவ எங்கே...?''

''ரூமிலதான் இருக்கா...''

''சாப்பிட்டாளா?''

''ஊஹூம். கூப்பிட்டா பதிலே இல்லே. அவ வீட்டுலேர்ந்து லெட்டர் வந்தது. பதில் எழுதிக்கிட்டிருந்தா...''

அருண் பெட்ரூமிற்குள் வந்தான். அவளைக் கவனிக்காதவன் போல ஷர்ட்டை ஹேங்கரில் மாட்டினான். கைலிக்கு மாறிக் கொண்டான்.

ஜானா எழுந்து பாத்ரூமிற்குப் போனாள். குளிர்ந்த நீர் முகத்தில் பட்டதும் கொஞ்சம் தெம்பாக இருந்தது. சோப் போட்டு அலம்பிக் கொண்டு, டவலைத் தேடி துடைத்துக் கொண்டு, பெட்ரூமிற்குத் திரும்பியவள் அதிர்ந்தாள்.

இவள் வருவதற்குள் படிக்க வேண்டும் என்ற பரபரப்புடன் ஒட்டப்பட்ட அந்த இன்லண்டின் இரு பக்க இடைவெளிகள் வழியாக உள்ளே எழுதியிருப்பதைப் படிக்க முயற்சி செய்து கொண்டிருந்தான்.




பிறந்த வீட்டிற்கு அவள் எழுதிய கடிதம் அது-

என்ன இங்கிதமற்ற செயல். மனசுக்குள் அருவருப்பானது அவளுக்கு.

கேட்டால் நிச்சயம் பிரித்துக் காட்ட அவள் தயங்கப் போவதில்லை. படிப்பதையும் தவறாக நினைக்கவில்லை. ஆனால் இதைச் செய்யத் தூண்டிய அவனின் அவநம்பிக்கையும், பயமுமே அவளை வெறுப்படைய வைத்தன.

அவளைப் பார்த்ததும் முகம் வெளிறியது அருணுக்கு.

அருகில் நெருங்கி இன்லண்டைப் பிரித்து அவனிடம் தொடுத்தாள்.

''ம்... இப்ப படிங்க''

அவன் அதை வாங்கவில்லை. அவள் பார்வையை எதிர்கொள்ள கூச்சப்பட்டான்.

''உங்களுக்கு நினைவிருக்கும்னு நம்பறேன். நாம லவ் பண்ணும் போதே பேசினது தான். எப்பவும் நாம மனசு விட்டுப் பேசி, நமக்குள்ளே எந்தவிதமான வருத்தமோ, சண்டையோ இல்லாம கடைசி வரை, ஹாப்பியா இருக்கணும்னு முடிவு பண்ணோம். ஞாபகம் இருக்கா...''

தளர்ந்து கட்டிலில் அமர்ந்தான்.

''என் மேல சந்தேகமா இருந்தா வெளிப்படையா கேட்டுடலாமே. அதை விட்டுட்டு... ஆனா ஒண்ணு... என்னைப் பொறுத்தவரை இது நம்ம பிரச்னை... இதைப் பத்தி நிச்சயமா எங்க வீட்டுக்கு எழுத மாட்டேன்.''

இன்லண்டை மேஜையின் மேல் வைத்தாள்.

''உங்களுக்கு எதனால இப்படியொரு தவறான நினைப்பு வந்ததோ... எனக்குப் புரியலே...'' என்று நிறுத்தினாள்.

பிறகு நிதானமாக ஆனால் அழுத்தமாகச் சொன்னாள்.

''ஐ லவ் யூ... ஐ லவ் யூ ஸோ மச்... நீங்க நம்பினாலும் சரி. நம்பாவிட்டாலும் சரி...''

மெல்ல உடைந்து அழ ஆரம்பித்தாள்.

கூச்சலிடாமல், வாதம் செய்யாமல், பூரணமாக வெகு இயல்பாக அவள் அன்பின் வெளிப்பாடு நிகழ்ந்ததில் அவன் மனசாட்சி தொடப்பட்டு விட்டது. காலை முதல் தனது செயலின் முட்டாள்தனம் குறித்து உறுத்திக் கொண்டிருந்த மனத்தின் கனமும் சேர்ந்து கொண்டது.

அவளை நெருங்கி கைகளைப் பற்றிக் கொண்டான்.

'தன் மேல் எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறாள்.. இவ்வளவுக்குப் பிறகும்...'

நிமிர்ந்து பார்த்தவளிடம் உண்மையான தவிப்புடன் சொன்னான்.

''ஐயாம் ஸாரி... ரியலி ஸாரி ஜானா.''

நிர்மலமான மனசுடன் மீண்டும் சொன்னான்.

''நாளைக்கு ராஜனுக்கு ஃபோன் பண்றேன்.. வரச் சொல்லி.''

பற்குழியினால் வலி ஏற்பட்டு, இந்த அரும்புப் புன்னகை கண்ணீர்ப் பெருக்காய் மாறிட அனுமதிக்காதீர்கள்.



இந்த சாக் உங்கள் பல் என வையுங்கள், மற்றும் இந்த வண்ணத் திரவம் கோல்கேட்டின் விசேட ஃப்ளோரைடு.



சாக்கை திரவத்தில் தோய்த்து இரண்டாக உடைத்திடுங்கள்



வண்ணத் திரவம் சாக்கில் ஊடுருவிச் சென்றுள்ளதைப் போல...



கோல்கேட்டின் விசேட ஃப்ளோரைடு பல் எனாமலில் ஊடுருவி கிருமிகளிலிருந்தும் பற்குழிகளிலிருந்தும் பாதுகாக்கிறது மற்றும் பற்களை உறுதியாக்குகிறது.



இப்போதே, குழந்தைக்கு ஃப்ளோரைடு பற்றி எடுத்துக் கூறுங்கள்.

கோல்கேட் ஃப்ளோரிகார்டு, கிருமிகளிலிருந்தும் பற்குழிகளிலிருந்தும் உங்கள் குழந்தைக்கு ஒப்பற்றப் பாதுகாப்பு.

**ஒப்பற்ற ஃப்ளோரைடு பாதுகாப்பு**




Rediffusion/CP/5747 f TM



# உங்களுடைய குழந்தையின் எதிர்காலத்திற்காக...

சங்கீதா இரண்டாம் வகுப்புப் படிக்கும் சிறுமி.

மிகுந்த ஆர்வத்துடன் தனது அப்பாவிடம் வந்து சொல்கிறாள்: "அப்பா... எங்க ஸ்கூல்ல ஆண்டு விழாவுக்கு ஒரு குரூப் மியூஸிக் நிகழ்ச்சி இருக்கு... என்னையும் பாடக் கூப்பிடறாங்க... நானும் சேரட்டா?"

"நீ ஒன்றும் பாட வேண்டாம்... பத்து பேரோட பதினோராவது ஆளா இருந்து பாட வேண்டாம். தனியாய்ப் பாட சான்ஸ் கிடைச்சாப் பாடு" என்று அவளது தந்தை தடுத்து விடுகிறார்.

இது சரியா?

தவறு. தன்னுடைய குழந்தை தனியாகப் பாடி பாராட்டைப் பெற வேண்டுமென்ற அவரது ஆசையை நியாயமானதாக இருந்தாலும் ஒரு குழந்தை குரூப் மியூசிக்கில் சேர்ந்து பாடும் போது அது கற்றுக் கொள்ளும் வாழ்க்கைப் பாடங்கள் பின்னால் அதற்கு உதவும்.

ஒரு குரூப்போடு சேர்ந்து பாடும் போது — இசைக் கருவிகளை வாசிக்கும்போது சரியான நேரத்தில் தாளம் தவறாமல், சரியான முறையில் வாசிப்பது, பாடுவது மிகவும் முக்கியமாக உள்ளது. தனியாகப் பாடும் போது — வாசிக்கும் போது இந்த அளவு பொறுப்பு கிடையாது. குழந்தையின் பழக்கப்பட்ட இசைக் காதுகள் சிறிய தவறு ஏற்பட்டாலும், குரூப் இசை அபஸ்வரமாக இருக்கும் என்பதை எடுத்துச் செல்லும். இதனால் பொறுப்புடன், சுயக்கட்டுப்பாட்டுடன் நடந்து கொள்ள வேண்டியது எவ்வளவு முக்கியம் என்பதைக் குழந்தை உணரும். இந்தக் குணம் வாழ்க்கை முழுவதும் மிகவும் உபயோகமானதாக இருக்கும். இம்முறையினால் இசை மட்டுமல்ல, சமுதாய வாழ்க்கையும் மேன்படும்.

இதைப் போல பள்ளியில் நடக்கும் பல தரப்பட்ட கூபநிகழ்ச்சிகளிலும் பேச்சுப் போட்டிகளிலும் குழந்தைகளைப் பங்கெடுக்க வைப்பது அவர்களுக்கு நல்லதையே செய்யும். பிற்காலத்தில் வேலை என்று தேடிப் போகும் போதும், உயர்தர பதவிகளை வகிக்க வாய்ப்பு கிடைக்கும் போதும், யார் தன்னுடைய மனத்தில் தோன்றும் கருத்துக்களை தெளிவாக மற்றவர்களுக்குப் புரிய வைக்கிறார்களோ அவர் வாழ்க்கையில் வெற்றி பெற்ற மனிதராகத் திகழுகிறார். ஒரு சிலர் உயர்ந்த பதவியில் இருந்தாலும் வாயைத் திறந்து நாலு வார்த்தைகள் பேசுவதற்குள் எவ்வளவு நடுங்கித் திணறிப் போய் விடுகிறார்கள். நாம் தைரியமாகப் பேசும் போது அதைக் கேட்பவர்





மனத்தில் நம்மைப் பற்றிய நல்ல அபிப்ராயம் ஏற்படுகிறது.

இளம் வயதில் இசை, ஓவியம் போன்ற நுண் கலைகளிலும் சற்று நேரம் செலவிடுவது பிற்காலத்தில் நேரத்தை எப்படிப் போக்குவது என்ற பிரச்னையினால் தவறான பழக்கங்களை கைக் கொள்ளாமல் இருக்க உதவும். ஓவியம் வரைவது பிற்காலத்தில் மருத்துவம், எஞ்சினியரிங் படிப்புப் படிக்கும் போது நிறைய மார்க் வாங்க கை கொடுக்கும்.

போதை மருந்துகள், மது இவற்றை நாடும் மாணவர்கள் இவற்றை அருந்துவதால் 'இன்பம்' கிடைப்பதாகக் கருதுகிறார்கள். இப்படிப்பட்டவர்களிடம் அறிவுரை கூறினாலும் கேட்க மாட்டார்கள். அவர்களுக்கு, இனிமையாக நேரத்தைச் செலவிட அந்த செய்கையினால் மனத்திற்கு திருப்தி ஏற்பட வழி செய்ய வேண்டும். இப்படிப்பட்ட பிரச்சனைகள் பிற்காலத்தில் ஏற்படாமல் இருக்க குழந்தைகளைப் படிக்கும் நேரம் தவிர்த்து 'கிரியேடிவ்வாக' ஏதாவது செய்யப் பழக்கப்படுத்த வேண்டும். புத்தகங்களைப் படிக்கும் வழக்கத்தை ஏற்படுத்தினால் மிகமிக நல்லது.

சென்ற தலைமுறையினர் தாங்கள் குழந்தைகளாக இருந்த போது அவர்களுக்குக் கிடைத்த சௌகரியங்களை விட இன்றைய குழந்தைகளுக்குக் கிடைக்கும் சௌகரியங்கள் மிக அதிகம். பல பெற்றோர்களும் இந்த விஷயத்தில் தங்களுடைய குழந்தைகளைப் பார்த்து நிச்சயமாக பொறாமைப்படலாம். விஞ்ஞானத்தின் வளர்ச்சியும், பொருளாதார மேம்பாடும் தான் இவைகளுக்குக் காரணம். சாதாரண நடுத்தர குடும்பங்களில் கூட டிவியும் — குறைந்தபட்சம் வாடகை விடியோக்களும் இருக்கின்றன. குழந்தைகளின் படிப்புக்கு அசௌகரியம் உண்டாகாதபடி பெற்றோர்கள் டிவி பார்க்கும் நேரங்களைக் குறைத்துக் கொள்வது மிக அவசியம்.

இன்றைய மாணவ மாணவிகளிடம் சற்று ஒழுக்கக்கேடுகள் அதிகமாகக் காணப்படுவதற்குக் காரணம் பெற்றோர்களும் ஆசிரியர்களும் கூடத்தான்.

மாணவர்கள், தாங்கள் பார்த்து நடக்க வேண்டிய உதாரண மனிதர்களை தேடித் தேடிப் பார்த்து ஏமாந்து போய் விடுகிறார்கள்.

குடிபோதைக்கு அடிமையான ஒரு தகப்பனும், எப்போதும் சிகரெட்டைப் பிடித்துக் கொண்டிருக்கும் ஒரு தகப்பனும் அந்த காரியங்களைச் செய்யாதே என்று தன்னுடைய மகனைப் பார்த்து எப்படி கேட்க முடியும்?

எது நல்லது, எது கெட்டது என்பது ஒவ்வொரு மகனும், மகளும் தங்களுடைய பெற்றோர்களுடைய வாழ்க்கையில் இருந்து தெரிந்து கொள்ள வேண்டிய ஒன்று. அப்படி தெரிந்து கொண்டால்தான் அது அவர்களுடைய மனத்தில் ஆழமாகப் பதியும்.

'ஆசிரியர்களும், மனிதர்களே. அவர்களுக்கும் பலவிதமான 'வீக்னஸ்' இருக்கலாம்' என்று வாதிடலாம். மாணவர்கள் எதிரில் புகை பிடிப்பதும் ஒழுக்கமற்று நடப்பதும் கூட அவர்களை அவ்வாறே செய்ய தூண்டுகிறது. குரு என்ற ஸ்தானத்தில் மாணவர்கள் ஆசிரியர்களை மதிக்க வேண்டும் என்றால் ஆசிரியர்கள் அந்த மாதிரி நடந்து கொள்ள வேண்டும். ஆசிரியர்கள் போதிக்க வேண்டியது பாடத்தை மட்டுமல்ல, ஒழுக்கத்தையும் கூட.

வசதிகளைப் பெருக்கிக் கொள்வதற்காக பெற்றோர்கள் பணம் சம்பாதிக்க ஆலாய்ப் பறக்கும் இந்தக் காலத்தில், அவர்கள் தங்களது சந்ததிகளை நல்ல முறையில் வளர்க்க, அவர்களுடன் கிடைக்கும் நேரத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். குழந்தைகளிடையே தங்களைப் பற்றிய நல்ல மதிப்பு, நல்ல பாதுகாப்பு, பொறுப்புணர்ச்சி முதலியன ஏற்பட வழி செய்தால் அவர்களது சந்ததிகள் அவர்களுக்கே எதிர்காலத்தில் ஏமாற்றத்தைத் தர மாட்டார்கள்.

— கமலநாதன்.



* கன்யா பூஜை

# பண்டிகையே ஒரு சமூகசேவைதான்!

இந்தியர்களின் வாழ்க்கை முறையே மிக உன்னதமான ஒன்று. பண்டிகைகள் வெறும் பொழுது போக்குக்காகவும், உற்சாகத்துக்காகவும் மட்டும் கொண்டாடப்படுவதில்லை. ஒவ்வொன்றின் பின்னணியிலும் நற்கருத்துக்கள் இருக்கும். இந்தியனின் வாழ்க்கை முறையில் மதமும், சமுதாயமும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை. அவற்றை வேறுபடுத்த முடியாது.

நம் நாட்டில் ஜனத்தொகைப் பெருக்கம், பற்றாக்குறை, வேலையில்லாத் திண்டாட்டம், கல்வி முறையில் கேடு என்ற வருந்தத்தக்க விஷயங்கள் நிலவுகின்றன. அதனால் அரசியல்வாதிகளும், அறிவாளிகளும் 'சமூக சேவை' 'சமுதாய விழிப்புணர்ச்சி' என்ற பெரிய வார்த்தைகளைப் போட்டு நம்மைக் குழப்பி விடுகின்றனர்.

சமூக சேவையும், சமுதாய நலமும் நமது வாழ்க்கை முறையோடு ஒட்டியே வருகின்றன. தினசரி வாழ்க்கையிலேயே கடைப்பிடிக்கப்படுகின்றன என்பதை கவனிக்கத் தவறி விடுகிறார்கள். கோவில்களிலும், மடங்களிலும் பிரசாதம் வழங்குவதும், விசேஷ நாட்களில்சாப்பாடுபோடுவதும்கூட சமூகப் பணிதான். நம் முன்னோர்கள் சமூக சேவையை எளிதாக நடைமுறையிலேயே கொடுத்தனர்.

நவராத்திரியின் போது பத்து நாட்களும் ஒவ்வொரு வீடும் ஒரு சமூகநலக் கூடமாகி விடுகிறது! ஒவ்வொரு குடும்பத்தினரும் மிகவும் இயல்பாக சமூகசேவகர்களாக மாறி விடுகிறார்கள்! மூன்று தேவியர்களையும் வழி படும் போது சுமங்கலிப் பெண்களையும், சின்னஞ்சிறு கன்னிப் பெண்களையும் தேவியின் ரூபமாக பாவித்து உபசாரம் செய்கிறார்கள். அவரவர் தங்களது சக்திக்கேற்ப இவர்களுக்குத் துணிமணிகள் கொடுத்து விருந்தும் செய்து வைப்பர். சமூகத்தில் நல்ல நிலையில் உள்ளவர்கள் ஏழைப் பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் இந்தப் பத்து நாட்களும் நிறையவே தர்மம் செய்கின்றனர். சிறிது சிந்தித்துப் பார்த்தால் இந்தக் காரியம் ஒவ்வொரு தனி மனிதனும் செய்யும் சமூக சேவைதான் என்பது புரியும்.

கோவில்களிலும், இதே வழக்கம் நடைமுறையில் உள்ளது. 'சண்டி ஹோமம்' 'லலிதா ஹோமம்' முதலியன செய்து, சுமங்கலிகளுக்கும், பெண் குழந்தைகளுக்கும் புடைவைகளும், பாவாடைத் துணிகளும் தானமாக வழங்குவர். அம்பாளுக்கு அலங்காரம் செய்து, கண் குளிரக் கண்டு, பிரார்த்தனை செய்து மனத்தூய்மை அடைகிறோம். ஏழை மக்களுக்குப் பொருளுதவி செய்து மனத்திருப்தி அடைகிறோம்.

கொலு பொம்மைகளை அழகுணர்ச்சியுடன் அடுக்கி, நமது வாழ்க்கை முறை, கலாசாரம், மதம், இவற்றைக் குழந்தைகளுக்கு மனத்தில் பதிய வைக்க முடிகிறது. இப்பொழுதெல்லாம் '20 அம்சத் திட்டம்,' 'முதியோர் கல்வி' என்றெல்லாம் கூட



* கன்யா பூஜை

பொம்மைகள் அடுக்கப்படுகின்றன. நமது பரந்த மனப்பான்மைக்கும் இது ஒரு சான்று. நாம் மதம் வேறு, அரசாங்கக் கடமைகள் வேறு என்று நினைக்காமல், இவையும் நம் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு அவசியமானவை என்று ஏற்றுக் கொண்டு, கொலுவின் மூலம் இளந்தலைமுறைக்கு இவற்றைப் போதிக்கிறோம்.

சமூகசேவைக்கென்று சங்கங்களும், அகாடமிகளும், ஒருபுறம் இருக்க வேண்டியது அவசியம்தான். ஆனாலும் நம் முன்னோர் தொண்டு, சேவை என்பவற்றை எல்லாம் நம் வாழ்க்கை முறையிலேயே நம் இரத்தத்தில் ஊறச் செய்துள்ளார்கள் என்ற உண்மையை மறக்கக் கூடாது. நமது கொண்டாட்டங்கள் எல்லாம் தெய்வத்துடன் பெரியோரையும், எளியோரையும் இணைத்து, அவர்களை வணங்கவும், மதிக்கவும் கற்றுத் தந்துள்ளன. இந்த வாழ்க்கை முறையைப் பாதுகாப்பதே நாம் செய்யும் மற்றோர் சேவையாகும்.

— லக்ஷ்மி ஜெயராமன்.

# இந்த மாதம் எப்படி?

## நவம்பர் '88

**மேஷ ராசி:**

அசுவனி, பரணி, கிருத்திகை 1 — ஆம் பாதம்.

மாதம் பூராவும் மனத்தில் ஒருவிதக் குழப்பம் நிலவும். மனோதிடத்திற்கும், தைரியத்திற்கும் காரணமான அங்காரகன் அத்தகைய சூழ்நிலையை உருவாக்குவார். ஆனால் குருவின் பலத்தால் கெடுதல் ஏற்படாது. இராகு இலாபத்தில் இருப்பதால் பணப்புழக்கம் சரளமாக இருக்கும். புதனும் சூரியனும் பலமாக சஞ்சரிப்பதால் ஒரு சிலருக்கு வாகன யோகம் உண்டு. ஆடை ஆபரணங்கள் சேரும். புத்திரர்களால் சிலருக்கு நன்மை ஏற்படும். ஆனால் பெண்களால் சுபச் செலவுகள் உண்டாகும். தொழிலில் மேன்மை உண்டு. கேதுவுடன் சுக்கிர சம்பந்தம் ஏற்பட்டிருப்பதால் பெண்களில் சிலருக்கு உடல்நலக்குறைவு ஏற்படலாம். பொதுவாக மாதம் முழுவதும் டென்ஷன் இருக்கும்.

**ரிஷப ராசி:**

கிருத்திகை 2, 3, 4 — ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீர்ஷம், 1, 2 — ஆம் பாதங்கள்.

அங்காரகனால் ஒரு சிலருக்கு வீடு, நிலம், வாங்கும் யோகம் ஏற்படும். அல்லது விக்கிரயத்தால் இலாபம் வரும். புதனால் ஆபரணங்களும், ஆடைகளும் சிலருக்குக் கிடைக்கும். அஷ்டமத்துச் சனி சற்று அலைக்கழிப்பார். ஆயினும் தரும கருமாதிபதி யோகத்தைத்தருகின்ற சனி, ஜாதகத்தில் சனி ஆட்சி, உச்சம் பெற்றவர்களுக்குக் கூடுதலான நன்மையையே செய்வார். புத்திரர்களால் மகிழ்ச்சி கிடைக்கும். சுபநிகழ்ச்சிகள் சிலரது வீட்டில் நடக்கும். இரசாயனம், மருத்துவம், கணிதத் துறையில் உள்ளவர்களுக்குக் கூடுதலான நன்மையே உண்டாகும். அதேபோல் கம்ப்யூட்டர், டீ.வி. போன்ற துறையினருக்கு நன்மையே ஏற்படும்.

**மிதுன ராசி:**

மிருகசீர்ஷம், 3, 4 — ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

மாதத்தின் முற்பகுதியில் ஏதாவது ஒரு வகையில் மகிழ்ச்சியும், சுபச்செலவுகளும், விருந்தினர் உபசரிப்பும், ஊர்ப் பிரயாணங்களும் இருந்து கொண்டேயிருக்கும். கணவன் மனைவி உறவும் குடும்பத்தில் கட்டுக் கோப்பும் இருந்து கொண்டே இருக்கும். ஆனால் மாதத்தின் பிற்பகுதியில் சிலருக்கு திடீரெனப் பதவி மாற்றமோ, மேலதிகாரிகளிடமிருந்து எச்சரிக்கையோ கிடைக்கும். எனவே எந்த இடத்திலும், எப்போதும் எதிலும் எச்சரிக்கை தேவை. நீசமடையும் சூரியன், நீங்கள் நினைத்ததை அடைய முடியாதபடி செய்யலாம். கீர்த்திக்கு பங்கம் வரலாம். கலைஞர்களுக்கு எதிர்பார்த்தபடி எண்ணங்கள் கைகூடாமல் போகலாம்.

**கடக ராசி:**

புனர்பூசம் 4 — ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

மாதம் பூராவும் தக்ஷிணாமூர்த்தியின் தயவு உண்டு. கல்வித்துறை, கணக்குத் துறை மற்றும் வங்கிகளில் உள்ளவர்களுக்கு நலம் தரும், மாதம். பொன்னாபரணங்களும், பரிசுகளும் கிடைக்கும். ஆனால் ஜாதக

நிலை, தசாபுக்தி நிலை சரியில்லாதவர்களுக்கு மாதத்தின் பிற்பகுதியில் மாறான பலனே ஏற்படும். இதனால் வீணான செலவு, கணவன் மனைவி உறவு, சற்று பாதிக்கப்படலாம்.எதிர்பாராள்ளவர்களுக் தரும்,மாதம்.பொன்னாபரண பாதிக்கப்படலாம். எதிர்பாராத விதத்தில் வம்புகளில் மாட்ட வேண்டியிருக்கும். தொழிலில் அவ்வளவாக பாதிப்பு இல்லை. கலைஞர்களுக்குச் சற்றுக் கூடுதலான நன்மை உண்டு. வெளிநாட்டுப் பிரயாணம் ஏற்படலாம். இராசிநாதன் உச்சத்தில் இருப்பதால் உரிய நேரத்தில் எதிர்பார்க்கும் வங்கி உதவி, அல்லது நண்பர்களின் உதவி கிடைத்து, பொருளாதாரச் சிக்கலிலிருந்து விடுபடலாம்.

**சிம்ம ராசி:**

மகம், பூரம், உத்திரம் 1 — ஆம் பாதம்.

சிம்ம ராசிக்காரர்கள் எப்போதுமே தலைமை தாங்கும் தகுதி பெற்றவர்கள். எனினும் இம்மாதத்தின் பிற்பகுதியில் சற்று தாழ்ந்து நிற்க வேண்டிய நிலை ஏற்படும். மாதத்தின் முற்பகுதியில் ஏற்படும் மன அமைதி, மகிழ்ச்சியான சூழ்நிலை இவை யாவும் பிற்பகுதியில் மாறிவிடும். கோபமும், பதற்றமும், தலைதூக்கும். கூட்டுக் குடும்பத்தில் சண்டைச் சச்சரவுகள், பாகப்பிரிவினை இவைகளுக்கு வாய்ப்பு உள்ளது. தந்தையின் உடல்நிலை சற்று பாதிக்கலாம். சனீஸ்வர பகவானும், சற்று சோதனைகளைத் தன் பங்குக்கு தருவார். அதனால் சிறு காயங்கள் ஏற்படலாம். எதிர்பார்த்த இனங்களில் இலாபம் ஏற்பட வாய்ப்பு மிகக் குறைவே. சற்று சுமாரான கால கட்டத்தில்தான் இந்த மாத சிம்மராசிக்காரர்கள் வாழ்க்கை நடத்த வேண்டியிருக்கும்.

**கன்னி ராசி:**

(உத்திரம் 2, 3, 4—ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2—ஆம் பாதங்கள்)

இந்த மாதத்தில் கன்னி ராசியிலுள்ள கன்னிப் பெண்களுக்குத் திருமணம் கைகூடி விடும். மிகவும் மகிழ்ச்சிகரமான மாதமாக இருக்கும். கட்டிடமா, மனையா, காரா, பிரிட்ஜா, கலர் டி.வி.யா என ஏதோ ஒன்று வாங்கி விடுவீர்கள். அந்த அளவிற்கு பணப் புழக்கம் இலாபகரமாக இருக்கும். இராசி நாதனாகிய புதன் இராஜ யோகத்தையும் களஸ்திரக்காரகனாகிய சுக்கிரன் நீசபங்க இராஜயோகத்தையும், தருவார்கள். தொழில் மற்றும் உத்தியோகம் இவற்றில் மனநிறைவு இருக்கும். கலைஞர்களுக்கு வெற்றி மாதம். குறிப்பாக படத்துறையினருக்கும் நடிகர்களுக்கும் சுறுசுறுப்பான காலமாக இருக்கும். தொழிலாளர் தலைவர்கள், மாதர் இயக்கப் பிரதிநிதிகள், பாராட்டும் பெறுவர்.

**துலா ராசி:**

(சித்திரை 3, 4—ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3—ஆம் பாதங்கள்.)

முதல் 15 நாட்கள் நல்ல பலன்களே நடக்கும். குடும்பத்தில் சுபநிகழ்ச்சிகள் நடைபெறும். அதனால் சுப விரயம் உண்டாகும். வீடு, கட்டிட விவகாரங்களில் இலாபம் எதிர்பார்க்கலாம். தொழிலில் முன்னேற்றம் உண்டு. வாசனைத் திரவியங்கள் மற்றும் அலங்காரப் பொருட்களை விற்கும் விற்பனையாளர்கள் இலாபம் பெறுவர். ஆனால் மாதத்தின் பிற்பகுதியில் முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலை உருவாகும். குடும்பத்தில் குழப்பமும், மன அமைதியின்மையும், ஏற்படலாம். வம்புதும்புகள், வழக்காடல்கள் என ஏதோ ஒன்று வாழ்க்கையில் குறுக்கிட்டு அமைதியான சூழ்நிலையைக் கெடுக்கும். மாமியார், மருமகள், அக்கா, தங்கை உறவுகள் பாதிக்கப்படும். எனவே மாதத்தின் பிற்பகுதி சற்று மந்தமான சூழ்நிலை காணப்படுவதால் எதிலும், நிதானமும், சகிப்புத் தன்மையும் தேவை என்பதை அறிந்து, அதற்கேற்ப நடக்கவும்.

பழைய குழம்பு, ரசம் போன்றவை கெட்டுப் போயிருந்தாலும் கூட, அதனை பித்தளை தவலை போன்றவற்றைத் தேய்க்கப் பயன்படுத்தலாம். அதிலுள்ள உப்பு, புளியின் பயனாக, பித்தளை பாத்திரங்கள் பளிச்சென்றிருக்கும்.

செல்லோ டேப்களில் சாதாரணமாகஇந்தமுனையைத்தேடுவதேபெரும் பாடாக இருக்கும். அதைத் தவிர்க்க உபயோகப்படுத்தியபின் முனையில் ஒரு துண்டுக் காகிதத்தை வைத்து ஒட்டி விட்டால் மறுமுறை சுலபமாகப் பயன் படுத்தலாம்.



— நிரஞ்சனா.

**விருச்சிக ராசி:**

(விசாகம் 4—ஆம் பாதம், அனுஷம், கேட்டை)

இந்த ராசிக்காரர்களுக்கு மாதத்தின் முற்பகுதி மனமகிழ்ச்சியைத் தரும். வைணவ ஸ்தலங்களுக்குப் புனித யாத்திரை போகும் நிலை சிலருக்கு ஏற்படும். வைரமும், வைடூரியமும் வாங்கும் யோகம் உண்டு. கடல் கடந்து செல்லுகின்ற வாய்ப்பும், தெரிகிறது. மாதம் பூராவும் சரளமாக பணவசதி இருக்கும். சிலர் பட்டுப் புடைவைகளும், பொன்னாபரணங்களும், வாங்குவீர்கள். தங்கள் பெண்கள் காரணமாகச் சிலருக்கு சுபச் செலவுகளும் ஏற்படும். மாதத்தின் பிற்பகுதியில் சிலு சகோதரிகளுக்குக் கண் சம்பந்தமான கோளாறு ஏற்பட்டு மருத்துவரை நாட வேண்டியிருக்கும். உஷ்ண சம்பந்தமான நோய்கள் உண்டாகலாம்.

**தனுசு ராசி:**

(மூலம், பூராடம், உத்திராடம் 1 — ஆம் பாதம்).

மாதத்தின் முற்பகுதியில் நன்மைகள் கூடுதலாகவும், பிற்பகுதியில் அமைதியின்மையும் ஏற்படும். வரவிற்கு மீறிய செலவினங்கள் உண்டு. சுபவிரயங்கள் ஏற்படும். பெரியோர்களின் சந்திப்பும், அதே சமயத்தில் அவர்களால் நன்மையும் ஒரு சிலருக்கு ஏற்படலாம். வெளியூர் பிரயாணத்தால் எதிர்பார்த்த ஆதாயம் ஏற்படாது. மாதத்தின் முதல் 15 நாட்களில் பணவரவு, நட்புறவு ஆகியவை மனத்திற்கு மகிழ்ச்சியை அளிக்கும். ஆனால் பிற்பகுதியில் நிலை மாறாக இருக்கும். சமூகப் பணியில் ஈடுபட்டுள்ள பெண்களானாலும் சரி, உத்தியோகத்தில் உள்ளவர்களானாலும் சரி, இந்த மாதம் சற்று சோதனை தரும் மாதமாக அமையும். மாதத்திற்கு முற்பகுதியில் தரும் கருமாதிபதிகளாக விளங்கும் சூரியனும் புதனும் பதவியில் உள்ளவர்களுக்கு உத்தியோக உயர்வையும், இதுவரை எதிர்பார்த்துக் காத்திருந்த பணி மாற்றமும் கொடுப்பார்கள்.

**மகர ராசி:**

(உத்திராடம் 2, 3, 4—ஆம் பாதங்கள் திருவோணம், அவிட்டம் 1, 2—ஆம் பாதங்கள்)

சென்ற மாதத்துப் பலனைப் போலவே அமைந்திருக்கும். எனினும் ஒரு சிலருக்கு சற்று மந்தமான சூழ்நிலை உருவாகும். கடல் கடந்து செல்லும் வாய்ப்பு சிலருக்கு உண்டு. சூரிய தசையும், சுக்கிர தசையும் நடப்பவர்களுக்குச் சற்று சோதனை மிக்க மாதமாக இருக்கும். ராகுவும், கேதுவும் நன்மையே செய்வார்கள். குருவின் பார்வை சகல சிரமங்களையும் குறைத்து விடும். எழுத்தாளர்கள், கவிஞர்கள் சற்று கூடுதலான நன்மை அடையலாம். சுக்கிரனும், புதனும் தருமகருமாதிபதியோகக்காரர்கள். எனவே மாதத்தின் பிற்பகுதி சற்று கூடுதலான நன்மையைத் தரும்.

**கும்ப ராசி:**

(அவிட்டம் 3, 4—ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3— ஆம் பாதங்கள்)

இந்த மாதத்தில் இராசி சனி பகவானால் எதிர்பாராத நன்மைகள் வந்தடையும். கருப்பு நிறமுடைய ஒருவரால் கலைஞர்களுக்கு நன்மை ஏற்படும். அரசியல்வாதிகள் ஏற்றம் பெறுவர். கல்வித்துறை, இரசாயனத்துறை, அழகு சாதனத் துறையினர் இலாபம் பெறுவர். ஒரு சிலருக்கு வீடு வாங்கும், அல்லது கட்டும் யோகம் ஏற்படும். வாகன யோகமும் உண்டு. வீட்டில் மகிழ்ச்சியும் மனநிறைவும் அபரிமிதமாகவே இருக்கும். புதனின் அதிதேவதையான திருமாலால் ஒரு சிலருக்கு வீடு வாங்கும், அல்லது கட்டும் யோகமும் ஏற்படும். பொன்னாபரணங்கள் வாங்கும் யோகம் ஏற்படும். பதவி ஏற்றமும், மனதுக்கேற்ற பதவி மாற்றமும், சிலருக்கு ஏற்படும்.

**மீன ராசி:**

(பூரட்டாதி 4—ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி)

மாதத்தின் முதல் 10 நாட்கள் நல்ல பலன்கள் கூடுதலாக இருக்கும். கலைஞர்களும், அரசியல்வாதிகளும், விஞ்ஞானிகளும், தமது முயற்சியில் வெற்றி பெறுவார்கள். அமிலங்களையும், காரங்களையும் தயாரிக்கும் விஞ்ஞானிகள் தொழில் துறையில் ஏற்றம் பெறுவார்கள். சிலருக்கு விருதுகளும், பட்டங்களும் தேடி வரும். மாதத்தின் பிற்பகுதியில் சுக்கிரன் சிலருக்கு நல்ல

எப்பொழுதுமே கஞ்சி குடிப்பதற்கு ஸ்டிரைக் செய்யும் என் குழந்தைக்கு, மறுமுறை கஞ்சி மாவு அரைக்கும் போதே சிறிது ஏலக்காயைப் போட்டு அரைத்துக் கஞ்சியைப் பாயசம் என்று சொல்லிக் கொடுக்க, கஷ்டமின்றிக் குடித்து விட்டது. இதை நீங்களும் முயற்சிக்கலாமே. — நிரஞ்சனா.



# பள்ளியிலிருந்து திரும்பும் குழந்தையின் லஞ்ச் பாக்ஸ் இனிமேல் காலியாகவே இருக்கும்!

சேவரிட் சேமியா சீக்கிரமாகச் சமைக்கக் கூடியது. எனவே காலை வேளை அவசரத்துக்குக் கட்டாயம் உங்களுக்குக் கைகொடுக்கும்.

சேவரிட் சேமியா உயர்தர சம்பா கோதுமை ரவையில் தயாரிக்கப்படுவதால் சத்து நிறைந்தது. பசியாற்றுகிறது. அருமையான சுவையும் அற்புதமான நறுமணமும் நிறைந்த அனேக உணவு வகைகளை சேவரிட் சேமியா கொண்டு தயாரிக்கலாம்.

இதோ ஒரு சுவையான உணவு. செய்து ருசித்துப் பாருங்கள்!

**விரைவான "சேவரிட் சேமியா பிரியாணி"**

**(15 நிமிடங்களில்)** தேவையான பொருட்கள் :

சேவரிட் சேமியா — 200 கிராம்.
வெங்காயம் 2. பூண்டு 8 பல். இஞ்சி ஒரு துண்டு. பச்சை மிளகாய் 2. கொத்தமல்லி பொடி 1 டீஸ்பூன். சீரகப் பொடி 1 டீஸ்பூன். சோம்பு 1 டீஸ்பூன் . கிராம்பு (லவங்கம்). ஏலக்காய் வகைக்கு 3. சிறு துண்டு லவங்கப் பட்டை 3 ஆகியவற்றை அரைத்துக் கொள்ளவும். தக்காளி 3; பொடியாக நறுக்கிய புதினா கீரை 1 டேபிள்ஸ்பூன்; கொத்த மல்லி இலை 2 டேபிள் ஸ்பூன்; வேக வைத்த காய்கறிக் கலவை அல்லது கொத்துக்கறி 1/2 கப்; ருசிக்குத் தேவையான உப்பு; நெய் அல்லது எண்ணெய்.

செய்முறை : சேவரிட் சேமியாவை பேக்கட்டில் கண்டுள்ளபடி சமைத்து, தனியே வைத்துக் கொள்ளவும். எண்ணெயைச் சூடாக்கி, மையாக அரைத்து வைத்த மசாலாவைப் போட்டு, வதக்கிக் கொள்ளவும். தக்காளிப் பழங்களைத் துண்டங்களாக நறுக்கிக் கலவையில் போட்டு, கூழாகும்படிச் செய்யவும். புதினா, கொத்த மல்லி, காய்கறிக் கலவை அல்லது கொத்துக் கறியைச் சேர்க்கவும். ருசிக்குத் தக்க உப்பு சேர்க்கவும். சேமியாவைச் சேர்த்து, கலவையை நன்றாகக் கிளறி விடவும். பாத்திரத்தின் வாயை மூடி, அடுப்பை லேசாகத் தணித்து 2 நிமிடங்கள் வைத்திருக்கவும்.

**இது 2 முதல் 3 டிபன் பாக்ஸ்களுக்கு :**

முன்னதாகவே செய்து வைத்துக் கொள்ள ஒரு குறிப்பு :

காய்கறிக் கலவை அல்லது கொத்துக்கறியை முதல்நாள் இரவே தயாரித்து, ஃப்ரிஜ்ஜில் வைத்து விடுங்கள். மறுநாள் காலையில் இதனைச் சூடுபடுத்தி, புதிதாகச் சமைத்த சேமியாவுடன் சேர்த்துக் கொட்டிக் கிளறிக் கொள்ளவும்.

**சேவரிட்**
**சேமியா**

**எதிர்பாருங்கள்! இன்னும் பல ருசிகரமான மதிய உணவு தயாரிப்பு முறைகளை, இதே பத்திரிகையில்.**



OBM 1049 F TM

ராஜயோகத்தைத் தருவார். அதனால் இது வரை கவனிக்கப்படாத அல்லது ஒதுங்கி இருந்த அரசியல்வாதிகள், ஆசிரியர்கள், சமூக சேவகிகள் ஆகியவர்கள் ஏதாவது ஒருவிதத்தில் அரசினாலோ, பொது மக்களி னாலோ பாராட்டப்பட்டு பயன் பெறு வார்கள். அரசியல் தியாகிகளானால் கௌரவம் பெறுவார்கள்.

## எழுத்துத் துறையில் ஏற்றம் பெறுவோர் யார்?

பெண்களின் கைகளில் புதன்மேடு சிறப்புற அமைந்திருக்க வேண்டும். அப்படி அமைந்துள்ள புதன் மேடு மற்ற மேடுகளை விட சற்று தூக்கலாகவும், அகன்றும் காணப்படும். அப்படிப்பட்ட அந்த மேட் டின் மேல் சற்றே சாய்ந்த நிலையில் (எக்ஸ்—ஒய்) ரேகை ஒன்று காணப்பட் டால், அம்மேட்டினை உடைய பெண்மணி, பார் புகழும் எழுத்தாளராக விளங்குவார். அந்த சகோதரியின் உள்ளத்தில் கற்பனை ஊற்றுக்குப் பஞ்சமே இருக்காது. எந்த ஒரு நிகழ்ச்சியையும் தன் கற்பனை வளத்தால் ஜீவனுள்ளதாக ஆக்கி, அந்த நிகழ்ச்சியி னைக் கருப் பொருளாகக் கொண்டமைந்த ஒரு சிறுகதையோ, நாவலையோ அவர், உருவாக்கி அழியாப் பெயரைப் பெற்றிடு வார். எத்தனையோ எழுத்தாளர்கள் இருந் தாலும் பழம்பெரும் பெண் எழுத்தாளர் களின் நடையிலே காணப்பட்ட நளினத்து டன் கூடிய கம்பீரத்தைப் படைத்திடுவது என்பது சுலபமல்ல. அத்தகைய சமூக நாவல்களை அந்தப் பெண் எழுத்தாளர் கள் படைத்திட்டார்கள் என்றால் அதற்குக் காரணம் அவர்களுக்கு புதனின் அதிதேவ தையான அந்த நாராயணனின் ஆசியும், அவனது நாபிக் கமலத்தில் தோன்றிய நான்முகனின் அருளும் கிடைத்திட்டதே யாகும். எனவேதான் சிறப்பான எழுத்தாள ராக ஆக வேண்டுமானால் பெண்களின் புதன்மேடு எடுப்பாக ரேகையுடன் கூடி இருக்க வேண்டும். அத்துடன் குருமேட்டின் மேல் நக்ஷத்திரக் குறி ஒன்று (எஸ்) இருக்க வேண்டும்.



அத்துடன் புதன் மேட்டில் ஒன்றுக்கு மேல் பல ரேகைகள் (எம்) இருந்ததேயா னால் அந்தப் பெண்மணி ஒரு மருத்துவ மேதையாகவோ, அல்லது ஒரு மருத்துவ மேதையை மணந்தவராகவோ இருப்பார். "பானை பிடித்தவள் பாக்கியம்" — என்பதற்கேற்ப, சிறந்த மேதைகளாக மருத்துவத் துறையில் விளங்குபவர்களைக் கணவர்களாகக் கொண்டுள்ள சகோதரி களின் கைகளில் அத்தகைய ரேகைகள் இருப்பதைக் காணலாம். அதே சமயம் சில சகோதரிகள், அறுவைத் துறையில் தலை சிறந்து விளங்குவதைப் பார்க்கலாம். அத்தகையவர்கள் கைகளில் சனி ரேகை எனப்படும் விதி ரேகை (ஏ.பி) நேராகவும், சீராகவும் சனிமேடு வரை சென்றிருக்கும். தாய்மார்கள் தங்கள் குழந்தைகளின் கை களில் இப்படிப்பட்ட ரேகை இருக்கிறதா என சிறுவர்களின் வலக்கையையும், சிறுமி களின் இடக்கையையும் பார்த்தறிந்து, அத்துறை சம்பந்தமான கல்வியில் அக் குழந்தைகள் மிகவும் ஈடுபாடு கொள்ளும் படி ஊக்கமூட்டி வளர்க்க வேண்டும். அவ்வாறு செய்தால் பிற்காலத்தில் அவர் கள் மேலே கூறப்பட்டது போன்ற மேதா விலாசத்தை அடையலாம். குறிப்பாக குழந்தைகளுக்கு நன்முறையில் கல்வியில் ஆர்வமும் புகழும் ஏற்பட புதன் மேடு நன்கு அமைந்திருக்க வேண்டும். அப்படி குழந்தைகள் மந்தமாக இருக்கிறார்கள் என தெரிந்தால் உடன் 'மேதா விலாச தக்ஷிணா மூர்த்தி ஹோமம்' ஒன்றை அக் குழந்தை களின் நக்ஷத்திரத்தில் செய்தால் அந்த மந்தத் தன்மை நீங்கி, குழந்தைகள் சுறுசுறுப் பாகப் படித்து மேதா விலாசத்தை அடை வார்கள் என்பது திண்ணம்.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்.

# ஜீவநதிகள்

18

சியாமளாராவ்

**பா**ட்டியின் மௌனம் ஜலஜாவை ரொம்பவுமே பலகீனப்படுத்தியது. பாட்டியின் மனம் எப்படி இவ்வளவு திடமாக இருக்கிறது. அதில் எள்ளளவும் தடுமாற்றம் இல்லாமல் ஒரு யோகினியைப் போல். அவளுடைய பேத்தியான நான்.... மனம் விழித்து ஆர்ப்பரித்தது. தீவிரமடைந்து உடைப்பெடுத்துக் கொண்டது.

''பாட்டீ...''

பின்பக்கமிருந்து காமாட்சியை அப்படியே அணைத்துக் கொண்டு கதறினாள்.

''மன்னிச்சிடு பாட்டி. மன்னிச்சிடு. உன் பேத்தியாயிருந்தும் எப்படி இந்த விதமா யோசித்தேன்னு கூட புரியாம கதர்றேன் பாட்டி. நான் இனிமேல காலேஜுக்குப் போகலே. உன்னோட நிழல்லேயே இருந்துடறேன். அப்பத்தான் வழி தவறாம இருப்பேன். நான் இனிமே உன்னை விட்டுட்டு எங்கேயும் போக மாட்டேன். பாட்டி. என்னை நம்பு பாட்டி. பாட்டி...''

காமாட்சியின் கண்களும் நிரம்பின.

''ஜலிம்மா! அழாதேடா கண்ணா. என் பேத்தி. என் பேத்திதான். அழாதேம்மா. காலேஜுக்குப் போகமாட்டேன்னு சொல்லாதே கண்ணா. இன்னிக்கு உன் மனசு சரியில்லே. அதனால நாளை.....''

''பாட்டி. நான் போக மாட்டேன். எனக்கு பயமாயிருக்கு. அவன் மறுபடி வழி மறிச்சு கலாட்டா பண்ணான்னா... வேண்டாம் பாட்டி. எம் மனசு தடுமாறித் துன்னா.....''

''ஜலஜா, மனசைத் தளர விடாதேம்மா. நடக்கத் தெரியாத குழந்தை. தத்தக்கா



பித்தக்கான்னு நடந்து கீழே தவறி விழுந்து துன்னா, மறுபடியும் அதை நடக்க விடாம இடுப்பிலேயவா தூக்கி வச்சுக்கறோம். ஒரு எடத்துக்குத் தெரியாம போயிடறோம்னு வச்சுக்கோ. அப்போ யாரையாவது கேட்டு சரியான பாதைக்குத் திரும்பி வந்துட றோமா, இல்லை அங்கேயே தங்கிடறோமா? அந்த மாதிரிதான்மா வாழ்க்கையும். தவறுன்னு தெரிஞ்சுண்டும் திருந்தாம இருக் கறதுதான் தப்பே ஒழிய, தவறு செய்யறது தப்புன்னு சொல்லலே. தெரியாம செய்யற தவறைத் திருத்திண்டு, நல்ல வழியில நடக்கறே பாரு. அதைப் போல உன்னத மான காரியம், நடத்தை வேறே இல்லே.

நீ சரியா நடந்துண்டின்னா, அந்தத் தெம்பே உனக்கு ஒரு வலுவையும் தைர்யத் தையும் தானாத் தரும். அவன் வந்தா என்ன? நீ பார்க்காம போ. இல்லையா, நான் என் வழியில போறேன், நீ உன் வழி யில போய்க்கோன்னு நல்லதனமா சுட்—டை சொல்லிடு. உன்னையறியாம யாரும் உன்னை ஒண்ணும் செஞ்சுட முடியாது. தனியா போகாதே. உன் காலேஜ் பொண் களோட சேர்ந்து போ, சேர்ந்து வா. இதுக் காக படிப்பை விட்டுட்டு வீட்டுல உக்காந் துண்டியானா உன்னோட மனசும் கெடும். உடம்பும் கெடும். நடந்ததெல்லாம் ஏதோ கெட்ட கனான்னு அதை மறக்க முயற்சி பண்ணு. இனிமே மனசை ஒளப்பறிச்சுக் காம தெளிவா வச்சுக்கோ. புரிஞ்சுதா ஜலிம்மா.''

''கண்டிப்பா பாட்டி. நீயும் எனக்காக வேண்டிக்கோ பாட்டி. அம்மாவுக்குத் தெரிய வேண்டாம் பாட்டி. நீ சொன்ன மாதிரியே நடந்துக்கறேன் பாட்டி. ப்ளீஸ் பாட்டி.''

''ஜலஜு... இதென்ன அசட்டுத்தனமா பேசிண்டு. இதையெல்லாம் அம்மாகிட்டே ஏன் சொல்லணும்? அவ வேறு கவலைப் பட்டே மண்டையைக் குழப்பிண்டு, கண் டதை யோசிச்சு, உடம்பைக் கெடுத்துப்பா. எனக்குக் கர்வப்பட்டதுக்கு ஒரு பங்கம்



வரப் பாத்துது. நல்லவேளை பகவான் புண்ணியத்துல தப்பிச்சுண்டோம். ம்... சரி இனிமே அதைப் பத்தி பேசறதை வுட்டுட்டு, ஆற வேலையைக் கவனி. எழுந்து போய்க் குளி. போம்மா."

காமாட்சியிடம் மறுபடியும் வந்து நின்று அவள் தோள் மேல் சாய்ந்து விம்மினாள் ஜலஜா. மீண்டும் அவளை சமாதானப்படுத்திக் குளிக்க அனுப்பினாள் காமாட்சி.

அன்று மாலையே நல்ல ஜுரம் வந்தது ஜலஜாவிற்கு. காமாட்சியின் மனம் ஒரு கணம் அதிர்ந்தாலும், தைர்யமாகவே இருந்தாள். டாக்டர் தந்த மருந்துகளை வேளா வேளைக்குத் தந்து, அவளை விட்டு ஓரடி கூட நகராமல், இங்கிதமாய் நடந்து கொண்டதில், இரண்டே நாட்களில் ஜுரமும், மனமும் சரியாக, தெளிவுடன் எழுந்து நடமாடினாள் ஜலஜா. சோர்வும், பலகீனமும் மறைந்து, உடலிலும், மனத்திலும் தெம்பு ஏற்பட, காலேஜுக்குப் போய் வரலானாள். அவள் முதலில் பயந்தபடி எதுவும் நடக்கவில்லை. இவளின் பராமுகத்தை உணர்ந்து கொண்ட அவன், வேறு மலரைத் தேடி போனானா இல்லை அவனும் தெளிந்தானா என்பது இவளுக்குத் தெரியாது. ஆனால் இவள் வழியிலிருந்து விலகி விட்டான். அவ்வளவுதான்.

ஒரு வாரத்தில் லதாவும் பிறந்தகத்திலிருந்து வந்தாள். வரும் போதே காமாட்சிக்கு மறுபடியும் சோதனையைத்தான் கொண்டு வந்தாள்.

இரவு காமாட்சியுடன் படுத்திருந்த லதா, ஏதோ சொல்ல முயல்வதும், பிறகு தயங்குவதுமாகப் பாயில் புரண்டாள். வெகு நேரமாகக் கவனித்துக் கொண்டிருந்த காமாட்சி லதாவைத் தன் பக்கமாய் திருப்பினாள்.

லதாவின் கன்னத்தைத் தன் தோல் சுருங்கிய கைகளால் இதமாய் தடவினாள்.

அந்த இதம், லதாவின் கண்களில் நீரை 'குபுக்'கென ஒரு திரையாய் திரள வைத்தது. காமாட்சியின் கையை இழுத்துக் கன்னத்துடன் ஒட்டி வைத்துக் கொண்டாள் லதா.

கைகளில் படிந்த ஈரம், மனத்திலும் படிய மென்மையாகக் கேட்டாள் காமாட்சி.

"லதாம்மா, என்னமோ சொல்லணும்னு நினைக்கறே, சொல்லத் தயக்கமாயிருக்கு, இல்லையா?"

சட்னிக்கு அரைக்கும்போது, நன்கு வேக வைத்த பலாக்கொட்டைகளையும் சேர்த்து வைத்து அரைத்தால் சட்னி வாசனையாக இருப்பதோடு தேங்காயையும் குறைத்து உபயோகிக்கலாம்.

— உமா.

உடைந்த போனாள் லதா. தன் மனத்தைப் படித்த காமாட்சியின் கழுத்தைக் கட்டிக் கொண்டு விசும்பினாள்.

சடாரென்று எழுந்து உட்கார்ந்த காமாட்சியின் மனம் இறைவனின் திருவடியைப் பற்றியது.

"ஈஸ்வரா! எனக்கு எந்தச் சோதனையையும், சாதனையாக்குகற பலத்தைத் தா. எனக்கு பக்கபலமாக நீ இருப்பா."

லதாவின் தலையைத் தன் மடியில் வைத்துக் கொண்டாள். முதுகை ஆதரவாகத் தடவியபடியே கூறினாள்.

"எந்த விஷயமானாலும் எங்கிட்டே சொல்ல என்ன தயக்கம் லதா? சொல்லும்மா. தயங்கிய காரியம் மயங்கித்தான் போகும். எதுவானாலும் எங்கிட்டே சொல்லு. நல்லதோ, கெட்டதோ அதை என் தலைல போடு. உன் மனசுல குடைஞ்சுண்டிருக்கறத வெளில கொட்டு. மனப் பாரம் கொறையும்."

குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தாள் லதா.

சரி, சிறிது அழுது ஓயட்டும். மனத்தின் கனம், கண்ணீர் விடுவதின் மூலம் குறைவதும் நல்லதுதான் என்று பேசாமலிருந்தாள் காமாட்சி.

கண்களை அழுந்தத் துடைத்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் லதா.

"பாட்டி.... நான் இப்போ சொல்றது தப்பா, சரியான்னு கூட இன்னும் எனக்கு மனசுல புரியாம ஒரு கலவரமாத்தான் இருக்கு. பாட்டி! என்னைத் தப்பா நினைச்சுக்க மாட்டேன்னு நீங்க சொன்னாத்தான் எனக்கு உங்ககிட்டே சொல்ற தைர்யம் வரும் பாட்டி."

"அடி பைத்தியக்காரப் பொண்ணே, உன்னைப் போய் நான் ஏண்டி தப்பாய் நினைச்சுக்கப் போறேன். எதுவானாலும் பயப்படாம சொல்லும்மா. உன்னோட யதார்த்தமான ஸ்வாபாவிகம்தான், நீ எதையும் நல்லா யோசிச்சுட்டுத்தான் செய்வேங்கற நம்பிக்கையை எனக்குத் தந்திருக்கு. ம், சொல்லு."

லதாவின் முகவாயைப் பிடித்து அருமையுடன் சொன்னாள் காமாட்சி.

"பாட்டி, ஆபீஸ்ல.... ஆபீஸ்ல...."

மேற்கொண்டு பேச்சு வராமல் தடுமாறினாள் லதா. கண்கள் அலைபாய்ந்து, உதடுகள் துடித்தன. உடலில் மெல்லியதான நடுக்கம்.

"ஆபீஸ்ல, உனக்கும், உன்னோட வேலை செய்யறவனுக்கும் ஏதாவது பேச்சு நடந்துதுன்னு சொல்ல வர்றியா லதா...."

புன்சிரிப்புடன் தயக்கமின்றி காமாட்சி வினவினாள்.

"பாட்டீ......!" மெல்லிய குரலில் கூவினாள் லதா. தன் மனத்தை இத்தனைத்

துல்லியமாய் கணித்திருக்கும் காமாட்சியை கண்கள் அகலப் பார்த்தாள்.

"லதா, நீ தடுமாறினதுலேருந்தே எனக்கு இது அந்த மாதிரி விஷயந்தான்னு மனசுல பட்டுடுத்து. சொல்லு, உன் சிநேகிதன் கிட்டே என்ன பேச்சு நடந்தது. என்ன சொல்றான். பதட்டப்படாம சொல்லும்மா."

அந்த நைச்சியமான வருடலில், மனம் கொஞ்சம் நிமிர, காமாட்சியை ஏறிட்டாள் லதா.

"பாட்டி! எங்க ஆபீஸில ரமணின்னு ஒருத்தர் வேலை பார்க்கிறார். ரொம்ப நல்லவர் பாட்டி. எனக்கு வேலையில ஏதாவது சந்தேகம் வந்தா, அவர்தான் சொல்லிக் குடுத்து ரொம்ப உதவி செய்வார் பாட்டி. பாவம்! அவருக்கும் கல்யாணமாகி ஒரு வருஷத்துலேயே, அவ போய்ட்டாளாம். அப்பா, அம்மான்னோ, கூடப் பொறந்தவான்னோ ஒருத்தருமே இல்லையாம். ரொம்ப வருத்தப்படுவார் பாட்டி. எனக்கும் ஐயோ....ன்னு இருக்கும். நீங்க தர டிபனை சில நாட்கள் அவருக்கும் கொடுப்பேன். என்னவோ மனசுல ஒரு பரிதாபம் தான் பாட்டி."

சுற்றி வளைத்து லதா பேசுவதை வெட்டினாள் காமாட்சி. "அந்த ரமணி, உன்னைக் கல்யாணம் பண்ணிக்கிறேன்கறான். அது தானே விஷயம்?"

காமாட்சி 'பட்'டென்று கூறியதும், லதா மறுபடியும் திடுக்கிட்டாள்.

திடுக்கிட்டு, திடுக்கிட்டே மனம் காமாட்சியிடம் சரணாகதி அடைந்தது.

பாட்டி........

சுனகரத்தில் சன்னமான குரலில் பிசிறு தட்டியது.

மனத்தில் எத்தனையோ எண்ணங்கள் நீர்க்குமிழி போல் வெளிப்பட்டு வெடித்து சிதறினாலும், வெளியே எதையும் காட்டிக் கொள்ளாமல் தெளிவாகவே பேசினாள் காமாட்சி.

"லதா! உன் மனசுல அவனைக் கல்யாணம் பண்ணிக்கணும்கற ஆசையிருக்கா. உனக்கு அவன் மேல் நம்பிக்கையிருக்கா. உங்க அப்பா, அம்மாட்ட சொன்னியா? அவா என்ன சொன்னாம்மா."

"பாட்டி! நான் உங்களைத்தான் எல்லாத்துக்கும் வழிகாட்டியாகவும், நெருங்கிய தோழியாவும் நினைச்சிண்டிருக்கேன். அதனாலதான் உங்களைத் தவிர வேறே யார் கிட்டேயும், பெத்தவாகிட்டே கூட சொல்லணும்னு தோணலை. என் மனசைப் பத்தியும் உங்களை விட யாராலயும் தெரிஞ்சுக்க முடியாது பாட்டி. அதனாலதான் எதானாலும் உங்ககிட்டேயே சொல்றேன். உங்களையே கஷ்டப்படுத்தறேன். பாட்டி, அவர் கேட்ட போது நடுங்கித்தான் போய்ட்டேன். அப்புறமா அவரோட பேசக் கூட பயமாத் தான் இருந்தது. ஆனால் அவரும் கட்டாயப் படுத்தலே. மறுபடியும் சாதாரணமாகவே பழக ஆரம்பிச்சோம். அவர் கேட்காத போதே, உன் மனசுல அவரைப் பத்திய எண்ணமே சுத்திச் சுத்தி வந்தது. பாட்டி! நானோ வாழ்க்கையைச் சரியாக் கூடப் புரிஞ்சுக்க முடியாதபடி கடவுள் அவரைக் கொண்டு போயிட்டார். அப்பா, அம்மா இருந்தாலும், எனக்குன்னு ஒருத்தர் வேணும்கற எண்ணம், ரமணியைப் பார்க்கிறப் போல்லாம், தோண ஆரம்பிச்சுடுத்து. அதனால உங்ககிட்டேயே சொல்லலாம். நீங்க தீர யோசிச்சு, எனக்குச் சரியான, முறையான, வழியைச் சொல்லுவேள்னுதான் உங்ககிட்டேயே சொல்றேன். உங்க மனசைச் கஷ்டப்படுத்திட்டேனோன்னு ரொம்பவுமே சங்கடமாயிருக்கு பாட்டி. என்னை மன்னிச்சிடுங்கோ. வழிவகை தெரியாம, எதிகாலத்தைப் பத்தியும் ஒண்ணும் யோசிக்கத் தெரியாம ரொம்பவுமே குழம்பிப் போயிருக்கேன் பாட்டி. ப்ளீஸ் பாட்டி. என்னைப் புரிஞ்சுண்டு சரியானபடி எனக்குச் சொல்லுங்கோ பாட்டி. சொல்லுவேளா...?"

குமுறலுடன், கெஞ்சும் குரலில் லதா கேட்டவுடன், அப்படியே அவளைத் தன்னுடன் சேர்த்து அணைத்துக் கொண்டாள் காமாட்சி. மனத்தில் ஒரு தீர்மானமும் எழுந்தது. உறுதி பிறந்தது பேச்சில்.

"லதா! ரமணியை ஒரு நாள் வீட்டுக்குக் கூட்டிண்டு வாம்மா. நான் பார்த்துப் பேசினப்புறம், என் மனசுக்குள்ளே நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டதுன்னா, மேற்கொண்டு, காரியம் நடக்க, உங்க ரெண்டு பேருக்குமே துணையா நிற்பேன். அதுவரை நீயும் கொஞ்சம் ஜாக்கிரதையாயிருந்துக்கோம்மா. சொல்றதைப் புரிஞ்சுண்டியா...?"

"பாட்டி... நீங்க... நிச்சயமா... நீங்களா:...?"

மேலே பேச முடியாமல் தொண்டையடைக்க, அப்படியே காமாட்சியின் மடியில் மடிந்து விழுந்தாள் லதா.

பழைமைவாதியான, ஆசாரம் நிறைந்த பாட்டி, தனக்கு மறுமணம் செய்விக்க ஒத்துக் கொள்வாள் என்பது லதா நினைத்தும் பார்க்காத ஒன்று. காமாட்சி, நிச்சயமாகத் தான் சொல்லுகிறாளா, இல்லை தன்னை இப்போது சமாதானப்படுத்தக் கூறியதா?

புரியாமல் காமாட்சியிடம், தான் இப்படிக் கேட்டது சரியா என்ற கேள்வி மறுபடியும் எழ, தன்னிரக்கம் மேலிட்டு, அவளுடைய அழுகை தீவிரமாகியது.

(தொடரும்)

# உஷார்! உஷார்! உஷார்!



சமீபத்தில் பெண் திருடர்கள் பலர், பாசம் காட்டுதல், வீட்டு வேலையில் உதவி செய்தல் போன்றவற்றின் மூலம் வீட்டில் புகுந்து சில நாட்கள் கழித்து அவ் வீட்டில் திருடிக் கொண்டு மாயமாய் மறைந்து வருவதாக பல பத்திரிகைகள் மூலம் படித்து வருகிறோம். ஆனால் சமீபத்தில், பெரம்பூர் ஹைரோடு, இரண்டாவது தெருவில் வசிக்கும் என் தோழிக்கு ஏற்பட்டது மிகவும் கொடுமையான நிகழ்ச்சியாகும்.

பிற்பகல் ஒரு மணி அளவில் தன் வீட்டு வராந்தாவில் உள்ள வாசல் கேட் அருகில் (உட்புறம்) அமர்ந்திருந்தாள். அவள் மாத விலக்கு சமயமாய் இருந்ததால், அருகில் சொம்பில் நீர், டம்ளர், போன்றவற்றுடன் பேப்பர் படித்துக் கொண்டு இருக்க, (கணவன்+குழந்தை பள்ளி, ஆபீஸ் சென்று விட்டார்கள்) மிகவும் மலண்டான- பெண்மணி ஒருத்தி, மிகவும் அழகாகவும், மாடலாகவும், தோளில் பையை மாட்டியபடி, நகைகள், மற்றும் விலை உயர்ந்த புடைவை அணிந்து கொண்டு, தோழியின் அருகில் வந்து (கேட் வெளியில்) குடிக்க தண்ணீர் கொடுக்கும்படி கேட்டிருக்கிறாள்.

அம்மா, அம்மா என முதலில் அழைக்க தோழி திடுக்கிட்டு நிமிர்ந்து என்ன? யார் நீங்கள் எனக் கேட்க சிறிது யோசித்து, பின்பு தன் அருகில் உள்ள சொம்பில் உள்ள நீரை டம்ளரில் எடுத்து (இடத்தை விட்டு எழாமலேயே) அவளிடம் கேட்டைத் திறந்து நீட்டிருக்கிறாள். வந்திருந்த பெண்ணின் தோற்றம் அவளைச் சிறிது கூட சந்தேகம் பட வைக்கவேயில்லையாம்.

தண்ணீரை வாங்கிய அப்பெண்மணி நொடியில் தண்ணீரை,தோழியின் முகத்தில் விசியடித்து, மூக்கு வாய் இரண்டையும் சேர்த்துக் கையில் அழுத்தி, சுவரில் தலையை மோதி (பலமுறை) மயக்கமுறச் செய்து தாலிச் செயினை பிடித்து இழுத்து அறுத்து எடுத்துச் சென்று விட்டாள். இவையாவும் சுமார் பத்து நிமிடத்திற்குள் நடந்து முடிந்து விட்டது. பக்கத்து போர்ஷன் பெண்மணி எதேச்சையாக வந்து பார்க்க இவளது மயக்க நிலையும் முகம் கழுத்தில் உள்ள (ரத்த) நகத்தின் கீறலும் பார்த்து சத்தம் போட, பலரும் ஓடி வர, தோழிக்கு தண்ணீர் தெளித்து, தண்ணீர் குடிக்கக் கொடுத்து யாவும் கேட்க விபரம் தெரிந்து தேட திருட்டுப் பெண்மணி, மாயமாய் மறைந்து விட்டாள்.

என் தோழி நகையை (திருமாங்கல்ய செயின்+திருமாங்கல்யம்) பறிகொடுத்ததோடு இல்லாமல், அவள் அடித்த அதிர்ச்சியில் இருந்து இன்னும் மீளவேயில்லை. பிரமை பிடித்தது போல் இருந்து வருகிறாள். மிகவும் தைரியசாலியும், எல்லாவற்றிலும் அதிக ஜாக்கிரதையுடன் இருந்து வருபவளுமான என் தோழியின் நிலையைப் பார்க்க மிக்க வருத்தமாக இருக்கிறது.

எனவே சகோதரிகளே! யார் வந்து எப்படி நாகரீகமாகவோ, வசதி படைத்தவர் போன்ற தோற்றம் இருந்தாலும் கூட, ஏழ்மை நிலையில் பசி பொறுக்கவில்லை என கேட்டு வந்தாலும் கூட இரக்கப்பட்டு, தயவுசெய்து இது போல் உதவி செய்து மாட்டிக் கொள்ளாதீர்கள் என கேட்டுக் கொள்கிறேன்.

— ஆர். பாலசரஸ்வதி.



